6-உ

# ஸப்த நதிகள்

ஆசிரியர்

காகா காலேல்கர்

மொழிபெயர்ப்பாசிரியர்

கா. ஸ்ரீ. ஸ்ரீநிவாஸாசாரியார்




ஜி. டி. சென்னை

 [ விலை 8-அணா

‘विश्वस्य मातरः सर्वाः सर्वाश्चैव महाफलाः।
इत्येताः सरितो राजन्! समाख्याता यथास्मृति॥’

‘அரசே! இந்த நதிகள் யாவும் உலகத்துக்குத் தாய்கள்; எல்லாம் பெரும் பயன் தரக்கூடியன, எனக்கு ஞாபகமிருக்கும் அவ்வளவு இவைகளைப் பற்றிக் கூறிமுடித்தேன்.’

— மகாபாரதம், பீஷ்மபர்வம் 9-37.

# பொருளடக்கம்



## படங்கள்

காவிரி - வைகை நதிகளின் மைந்தர்களுக்கு

## வணக்கம்

நான் மூலப் புத்தகத்தை ‘லோக மாதா’ என்ற பெயருடன் குஜராத்தியில் எழுதியிருந்தேன். எந்த நதிகளை நான் தரிசித்தேனோ, எவைகளின் ஸ்நான - பானத்தினால் நான் என்னைப் புனிதனாக்கிக்கொள்ள முடிந்ததோ, அந்த நதிகளுக்கு என் பக்தியின் ஒவ்வொரு வணக்கத்தையும் செலுத்துவதுதான் அதன் நோக்கமாக இருந்தது. குஜராத்திலுள்ள நதிகளை நான் வேண்டுமென்றே வேறாக வைத்திருந்தேன்; குஜராத்தையே சேர்ந்த ஒரு நதி-பக்தர் இந்த அஞ்சலி - மாலையைப் பூர்த்தி செய்வார் என்ற நம்பிக்கைதான் அதற்குக் காரணம். ‘லோக மாதா’ வில் நான் சுமார் இருபத்தேழு அஞ்சலிகள் சமர்ப்பித்திருந்தேன். அவைகளிலிருந்து ஏழு அஞ்சலிகளைத் தேர்ந்தெடுத்து ஹிந்தி-உலகின் முன்பு வைத்திருந்தேன். இப்போது அதே ‘ஸப்த ஸரிதா’வின் தமிழ் மொழிபெயர்ப்பு ஸ்ரீ. ஸ்ரீநிவாஸாசாரியரின் கிருபையால் வெளிவந்திருக்கிறது. என் தமிழ் நாட்டு நண்பர்களின் முன்பு இதை வைக்க எனக்கு மிகவும் சங்கோசமாயிருக்கிறது. ஏனென்றால், இதில் கிருஷ்ணாவும் கோதாவரியும் மாத்திரமே வருகின்றன. நெல்லூரின் பிநாகினீ, விஜயநகரத்தின் துங்கபத்திரை, கிரஸப்பா நீர்வீழ்ச்சியின் சராவதி முதலிய நதி

களுக்கு நான் அர்ப்பித்த அஞ்சலிகளின் மொழி பெயர்ப்போ, இதில் வரவே இல்லை. இதைத் தவிர விச்வஜித் யஜ்ஞம் செய்யும் காவிரி நதி, மதுரையின் வைபவத்தை எடுத்துக்கொண்டு இராமேச்வர யாத்திரையின் சங்கற்பத்தோடு ஓடும் வைகை, மங்களூரின் ஒப்பற்ற சோபையைப் பத்து மடங் காக்கும் குருப்புரும் நேத்திரவதியும், கார்வாரில் நான் என் குழந்தைப் பருவத்தில் எவளைக் கண்டு கண்களின் விழாவைக் கொண்டாடினேனோ, அந்தக் காளி நதி, திருவாங்கூரை மண்ணை விண்ணகமாகச் செய்யும் அங்குள்ள கடற் கழிகள் முதலிய ஸரிதைகளுக்கு அஞ்சலி சமர்ப்பிப்பது இன்னும் பாக்கியாகவே இருக்கிறது. அதின்றி இந்தச் சிறு புத்தகத்தைத் தமிழ் நாட்டின் ஸம்ஸ்கார-ரஸிகர்களான மக்களின் முன்பு நான் எப்படி வைப்பது? அவர்கள் என்ன சொல்லுவார்கள்?

ஆனால், இதற்காக உழைத்தவரோ, தமிழ் நாட்டையே சேர்ந்தவரும், பல பாஷைகள் அறிந்தவருமான ஒரு த்விபாஷி. நான் அவரை எப்படித் தடுக்க முடியும்? என் மனத்தில் வட இந்தியாவுக்கும் தென் இந்தியாவுக்கும் இடையே யாதொரு வித்தியாசமும் இல்லை. என் பிறப்பு, என் இருப்பிடம், என் கல்விப் பயிற்சி— எல்லாம் வடநாட்டுக்கும் தென்னாட்டுக்கும் இடையிலேயே நிகழ்ந்திருக்கின்றன. என் பார்வை இரு புறங்களிலும் ஒரே பக்தியோடு ஓடுகிறது. வடக்கே அந்தப் பார்வை, ஓங்கி உயர்ந்தவையும், மிக நீளமானவையும், விசாலமானவையுமான இமயமலைச் சிகரங்கள் வரையில் சேருகிறது

என்ருல், தெற்கே அது மூன்று மகா சமுத்திரங் களின் சங்கமம் வரையிலும் சென்று இளைப்பாறு கின்றது.

இங்கே நான் மற்ற நதிகளைப் பற்றி என்ன சொல்லியிருக்கிறேனே, அதே பக்தி பாவனை யைத்தான் நான் காவிரி, வைகை, பெண்ணை, பாலாறு, கடப்பிரபா, மலப்பிரபா, நேத்திரவதி, குருபுர் முதலிய நதிகளின் விஷயத்திலும் அனு பவித்திருக்கிறேன். தென்னுட்டு நதிகளின் பேரன்பு நிரம்பிய விருந்தோம்பலை, நன்றியறிவும் பக்தியும் சேர்ந்த என் அஞ்சலியுடன், சொற் களிலே நான் அமைக்காத வரையில் எனக்குத் திருப்தி உண்டாகாது.

எனக்கு அறிமுக மில்லாத தமிழ் நாட்டு வாசகர்கள் எனக்கு ஆசீர்வாதம் தருவார்களாக.

வர்தா,<br>ரக்ஷாபந்தனம், 1940 } காகா காலேல்கர்

# ஆசிரியரும் நாமும்

ஆசார்ய காகா காலேல்கர் குஜராத் வித்தியா பீடத்தின் ஸ்தாபனுசாரியர், மகாத்மா காந்தியைப் பின்பற்றுபவர்களில் முதன்மையானவர், காந்திய தத்துவத்தின் இணையற்ற உரையாசிரியர், நமது பாரத நாட்டின் கலைப் பண்பின் பிரதிநிதி. அன்ன வரை நம் தமிழ்ச் சகோதர சகோதரிகளுக்குப் புதிதாக அறிமுகம் செய்விக்கத் தேவையில்லை. அவருடைய தொண்டு பிரசித்தமானது. இந் நூல், பாரததேவியின் மணியாரங்களாக விளங் கும் ஸப்த நதிகளுக்கு அவர் பக்திபூர்வமாக அர்ப்பித்த அஞ்சலிகளின் தொகுதி.

இந்த 'ஸப்த நதிகள்' பூகோளப் புத்தகம் அன்று. சரித்திரமே புலப்படாத பழம்பெருங் காலத்திலிருந்து இன்றுவரை பொங்கிப் பரந்து ஓடிக்கொண்டிருக்கிற பாரத நாகரிகத்தையே — கலைப் பண்பையே — ஆசிரியர் இதில் வருணித் துள்ளார். அவருடைய ஒவ்வொரு வார்த்தையி லும் பக்தி மணம் பரிமளிப்பதைக் காணலாம்.

காகாஜீ தமிழ்நாட்டுக்குப் பன்முறை வந் திருக்கிறார். பாரத நாடு வட பகுதி, தென் பகுதி என்று அவர் கண்ணுக்குப் புலப்படுவதில்லை. ஒரு முறை அவர் தென்னுட்டுக்கு விஜயம் செய் திருந்தபோது, 'வடக்கில் இமய மலையில் பாரத தேவியின் மணிமுடி விளங்கிய போதிலும், அத ஞல் தெற்கு தாழ்ந்ததில்லை — தெற்கேதானே அன்னையின் திருவடிகள் இருக்கின்றன! அவற் றைத் தினமும் பூஜிக்கும் பாக்கியம் பெற்றவர் கள் தெற்கேயுள்ள நீங்கள்தானே!' என்ற கருத்

துப்படக் கூறினர். ஆதலால் அவருடைய முகவுரையில் கூறியிருப்பது போல், நமது நதிகளையும் பற்றிய அஞ்சலிகளைச் சொற் சித்திரங்களாக அமைக்காத வரையில் அவருக்குத் திருப்தி ஏற்படாது. விரைவில் அவருடைய பேரபிமானம் கனிந்து பழமாகவேணும் என்று பிரார்த்திப்போம்.

இந் நூலைத் தமிழில் வெளியிட ஆதரவுடன் அனுமதி தந்த ஆசிரியருக்குத் தமிழ்நாடு பெரிதும் கடமைப்பட்டிருக்கிறது.

இந் நூலில் வந்துள்ள, 'தோழி மார்க்கண்டி'யும், 'கங்கைத் தா'யும் 'கலைமக'ளில் வெளி வந்தவை. 'ஸ்வர்ண பூமியின் தாய்' 'சுதேச மித்திரன்' விஜயதசமி மலரில் வந்தது. இவ்விரு பத்திரிகைகளின் ஆசிரியர்களுக்கும் என் நன்றியைச் செலுத்திக்கொள்ளுகிறேன். மற்ற நதிகளையும் பற்றி என்னை எழுதத் தூண்டி, இந் நூலை விரைவில் வெளியிட வேண்டும் என்று ஏற்பாடு செய்த நவயுகப் பிரசுராலயத்தாருக்கு என் அன்பும் தொண்டும் என்றும் உரியன.

இப் புத்தகத்தின் கடைசியில் கொடுக்கப்பட்டுள்ள மூன்று அனுபந்தங்களும், நூலில் குறிக்கப்பெற்றுள்ள க்ஷேத்திரங்கள், வீரர்கள், முனிவர்கள், ஞானிகளைப் பற்றியும், அரும்பதங்களின் பொருளையும் தெரிந்துகொள்ள உதவும் என்று நம்புகிறேன்.

சென்னை
கார்த்திகை நிபம், 1940 } கா. ஸ்ரீ. ஸ்ரீ.



கங்கைத் தாய்

## 1. தோழி மார்க்கண்டி

ஒவ்வொரு நதியும் நம் தாய்தானு? அல்ல. மார்க்கண்டி என் குழந்தைப் பருவத்துத் தோழி. 'அக்கா' என்றுகூட அழைக்க முடியாது; அவ்வளவு சிறியவள் அவள். என் வயலில், பகலில் அந்த அத்திமரத்தின் கீழே, நிழலில் போய் உட்காரும்போது, மார்க்கண்டியின் குளிர்ந்த, மிக மெல்லென்ற காற்று என்னைத் தவருமல் அழைக்கும். எத்தனையோ தடவைகள் நான் கரையிலே உட்கார்ந்து, காற்றின் அலைகளிலே அசைவுறும் அழகிய புல்லை மணிக்கணக்காகப் பார்த்துக்கொண்டிருப்பேன். மார்க்கண்டியின் கரையில் அப்படி ஒன்றும் விசேஷமோ, அற்புதமோ இல்லை. அதிசயமான பூக்களும், நிறநிறமான வண்டுகளும், கவர்ச்சியுடைய அழகிய கற்களும் அங்கே இல்லை. கலகலவென்னும் ஓசையினுல் மனத்தைச் சஞ்சலப்படுத்தும் சிறிய பெரிய நீர் வீழ்ச்சிகளும் இல்லை. அமைதிதான் அங்கே நிலவியிருக்கிறது.

மார்க்கண்டி பைஜ்நாத் மலைகளிலிருந்து வருகிருளென்று இடையர் கூறுகின்றனர். ஆனுல், அவளுடைய உற்பத்தி ஸ்தானத்தைக் கண்டுபிடிக்கவேண்டுமென்ற எண்ணம் எனக்கு எப்போதும் உண்டானதில்லை. என் கையில் என் தாலூகாவின் படம்

கிடைத்தால், அதில் நான் மார்க்கண்டியைக் குறிக்கும் சிறிய கோட்டைத் தேடமாட்டேன். ஏனெனில், அவ்வாறு செய்வதால் அவள் 'என் தோழி' என்ற நினைவு மாறி, ஒரு நதிமாத்திர மாகிவிடுவாள். மார்க்கண்டியின் நீரில் என் கால்களை அமிழும்படி வைத்துவிட்டு உட்காருவதிலே எனக்கு மிகுந்த ஆவல். அதில் கால் வைத்தவுடனே சலசலவென்ற ஒலி எழும். சிறு வயதிலே நாங்கள் அதிகமாகப் பேசுவோம். ஒருவரோடு ஒருவர் பழகுவதே போதும்; அதில் எங்களுக்கு ஓர் இன்பம் இருந்தது. மார்க்கண்டி என்ன சொல்லுகிருள் என்று அறியும் கவலை எனக்குக் கிடையாது; என் மொழிகளைப் புரிந்துகொள்ள வேண்டும் என்று அவள் முயலுவதும் இல்லை. ஒருவரைக் குறித்து ஒருவர் பேசிக்கொள்வதே எங்கள் இருவருக்கும் போதுமானதா யிருந்தது. அண்ணனும் தங்கையும் பல வருஷங்களுக்குப் பின் சந்திக்கும் போது பல்லாயிரம் கேள்விகள் கேட்கிருேம். ஆனுல் இந்தக் கேள்விகளில் ஒரு கருத்தும் இராது. இது அன்பை வெளிக்காட்டும் முறைகளிலே தனிமையான தொன்று. அந்த அன்பின் சந்திப்பிலே, 'கேள்வி என்ன? அதற்குக் கிடைத்த விடை என்ன?' என்பதைப் பற்றிக் கவனிக்க ஒழிவுதான் ஏது? நான் மார்க்கண்டியின் கரையில் உலாவி வருவேன். மார்க்கண்டி என் குழந்தைப் பாட்டுக்களைக் கேட்டுக் கொண்டிருப்பாள்.

பதினுருவது வயதில் தம்மை யமன் அழைத்துச் செல்ல வரும் போது, சங்கரர்பாலுள்ள பக்தியின் வன்மையினுல் அவனைப் பின்னே பிடித்துத் தள்ளிய மார்க்கண்டேய ரிஷியின் உபாக்கியானத்

தைப் பாடும்போது, அந் நாட்களிலே எனக்கு எவ்வளவு இன்பமுண்டாகும்!

'நல்ல அழகிய கெட்டிக்காரப் பிள்ளை; பதினாறு வயது ஜீவித்திருப்பான். மற்றொருவன் முட்டாளும் குரூபியுமான பிள்ளை; நூறு வருஷங்கள்வரை அப்படியே இருப்பான். இவ்விருவரில் உனக்கு யார் வேண்டுமோ சொல்,'

என்று மகாதேவர் மிருகண்டுவுக்கு வரமளித்தார். ரிஷி தம் தர்ம பத்தினியை நோக்கி, 'இவ் விரண்டில் எந்த வரம் கேட்கலாம்?' என்று வினவினார். இருவரும், 'பதினாறு வயது வாழ்ந்தாலும் நற்குணமுள்ள மகனே நமக்கு வேண்டும்; அவனாலே நம் குலம் கடைத்தேறும்' என்று நிச்சயித்து, முதல் வரத்தைக் கோரினர். மார்க்கண்டேயன் பெரியவனாகி வளர வளர, பெற்றோர்களின் முகம் வெளுக்க ஆரம்பித்தது. கடைசியில் பதினாறு வருஷங்கள் முடிந்துவிட்டன.

இளைஞன் மார்க்கண்டேயன் பூஜையிலே அமர்ந்திருக்கிறான். யமதேவன் எருமைக் கடாவின்மேல் ஏறி வந்துவிட்டான். ஆனால், சிவலிங்கத்தோடு பொருந்தியிருக்கும் இளைஞனான பக்தனைப் பிடிக்க அவனுக்குத் தைரியம் எப்படி வரும்! ஆயினும் பாசத்தை வீசினான்; சிவலிங்கத்திலிருந்து திரிசூலம் ஏந்திய சிவபிரான் தோன்றினார். இந்த அநீதத்துக்காக யமனுக்குப் பல சாபங்கள் கிடைத்தன. மிருத்தியுஞ்ஜயரான மஹாதேவரைக் கண்ட பின்பு மார்க்கண்டேயனுக்கு மரண பயம் ஏது? அவனுடைய ஆயுள் தாரையே இன்றும் ஓடிக்கொண்டிருக்கிறது.

நான் கலாசாலையில் படித்துக்கொண்டிருக்கும் போது, பரீக்ஷைக்குப் பின்பு 'ப்ராத்ரு த்விதீயை'

வரும். வயலில் பயிர் அறுவடைக்குத் தயாராய் இருக்கும். வயலிலேயே இரண்டு நாட்கள் கழிக்கவேண்டி வரும். அப்போது மார்க்கண்டி எனக்கு இனிய வள்ளிக்கிழங்குகளை உண்ணக் கொடுத்துத் தன் அமுத நீரைப் பருகவைப்பாள். இரவில் அவள் குளிரால் நடுங்குகிறுளோ என்று நான் பார்க்கப் போகும்போது, அவள் தன் மாசற்ற கண்ணுடியிலே எனக்கு மிருகசீர்ஷ நக்ஷத்திரத்தின் காட்சியைக் காட்டுவாள்.

இன்றும், நான் என் வீட்டுக்குப் போகும்போதெல்லாம் தோழி மார்க்கண்டியைப் பாராமல் இருக்க மாட்டேன். ஆனுல் அவள் என்னேடு முன்போல விளையாடுவதில்லை; சிறிது புன்சிரிப்புடன் சும்மா இருந்துவிடுகிருள். அவளுடைய கோமள முகத்தில் முன்போன்ற லாவண்யத்தை நான் இப்போது காண்பதில்லை; அவளுடைய சிநேகத்தின் ஆழம் அதிகரித்திருப்பதையே நான் இப்போது காண்கிறேன்.

## 2. கிருஷ்ணுவின் நினைவுகள்

### [1]

அன்று ஏகாதசி. மாட்டு வண்டியில் உட்கார்ந்து நாங்கள் மாஹூலிக்குச் சென்ளேம். ஸதாராவி லிருந்து மாஹூலி வேண்டிய தூரமிருக்கிறது. வழி யில் வலது புறத்தில் ஸ்ரீ சாஹூஜி மஹாராஜாவின் யஜமான பக்தியுள்ள நாயின் சமாதி இருக்கிறது. எங்களைப் போலவே இன்னும் பலர் மாஹூலியை நோக்கி வண்டிகளை ஓட்டிக்கொண்டு வந்தனர். நாங்கள் நதிக்கரையில் போய்ச் சேர்ந்துவிட்டோம். அங்கு, இக்கரையிலிருந்து அக்கரை வரையில் உயர மான கம்பங்களில் கட்டப்பட்ட ஓர் இருப்புச் சங்கிலி யும், அதில் பிணைக்கப்பட்டுத் தொங்கிக்கொண் டிருந்த ஒரு படகும் என் குழந்தைக் கண்களுக்கு மிக அழகியனவாகத் தோன்றின.

கரையிலிருந்த கூழாங்கற்களின் வழவழப்பும், கருமையும், குளிர்ச்சியும்தான் என்னே! ஒரு கல்லைக் கையில் எடுத்தால் சட்டென்று மற்ளுென்றின்மீது பார்வை விழும். இதற்குள் மூன்ளுவது நனைந்த கூழாங்கல்மீது காவி நிறக் கோடுகள் காணப்படும்; அதை எடுத்துக்கொள்ள மனம் பெரிதும் ஆவலிக் கும். அன்றுதான் முதல் தடவையாக எனக்குக் கிருஷ்ணுவின் தரிசனம் கிடைத்தது. முதன்முதல் கிருஷ்ணுதான் என்னை அறிந்துகொண்டாள். அவளை அறிந்துகொள்ளும்படி நான் அப்போது அவ்வளவு பெரியவனுகிவிடவில்லை. குழந்தை தாயை அறிவ

தற்கு முன்னமே தாய் அதைத் தனதாக்கிக் கொள்ளு கிருள். நாங்கள் ஆடையின்றி நதியில் நன்கு துழாவினேம்; குதித்து விளையாடினேம்; நீரை இரைத்தோம்; படகிலேறிக் கிருஷ்ணைத் தாயின் மடியில் பெருங் கும்மாள மடித்தோம். அன்று நாங்கள் கிருஷ்ணுவில் செய்த ஜல விஹாரத்தால் எங்களுக்குக் கடும்பசி எடுத்துக்கொண்டது.

எங்ஙனம் நதிகளில் அதுவே எனது முதல் தரி சனமோ, அங்ஙனமே குளித்த பின்பு நான் உண்ட உப்புக் கலந்த வேர்க்கடலைச் சிற்றுண்டியின் சுவை யும் எனக்கு முதன்முதலானதுதான். அந்த யாத் திரையில் மயில் தோகைகளின் தொப்பி யணிந்த 'வாஸுதேவ'ரும் எங்களிடம் பிச்சை கேட்க வந் தார். அன்று முதல் தடவையாக நாங்கள் அவ ருடைய இனிய பஜனையைக் கேட்டோம். கிருஷ் ணைத் தாயின் கோயிலில் சற்று இளைப்பாறிவிட்டு நாங்கள் வீடு திரும்பினேம்.

ஸஹ்யாத்திரியின் வனங்களில், மஹாபலேச்வரத் துக்கு அருகிலிருந்து புறப்பட்டு ஸதாரா வரையில் ஓடி வருவதற்குக் கிருஷ்ணுவுக்கு வெகு நேரம் பிடிப்பதில்லை. ஆனல் இதற்குள்ளேயே வேண்யா நதி சகோதரி கிருஷ்ணுவைச் சந்திக்க வந்துவிடு கிருள். மாஹுலியின் பெருமைக்குக் காரணம் இவ் விருவர்களின் சங்கமம்தான். இந்தச் சங்கமத்தைக் கண்டு, இரண்டு பெண்கள் ஒருவர்க்கொருவர் தோள் களில் கைகளைப் போட்டுக்கொண்டு விளையாடப் புறப்படுவது போல, அன்று எனக்குத் தோன்றிய ஒரு காட்சி முப்பத்தைந்து வருஷங்கள் வரையில் என் இதயத்தில் பதிந்திருந்தது.

கிருஷ்ணுவின் குடும்ப - பரிவாரங்கள் வேண்டிய அளவு பெரியன. சிறியரும் பெரியருமான பல நதிப் பெண்கள் ஓடிவந்து அவளேக் கழுத்தில் அணேத்துக் கொள்கின்றனர். கோதாவரியோடு கூடவே கிருஷ்ணுவையும் நாம் ‘மஹாராஷ்டிரத்தின் தாய்’ என்று கூற இயலும். இன்றைய மராட்டி பாஷை பேசப் படாமலிருந்த ஒரு காலத்தில், அப்போதைய மஹா ராஷ்டிரம் முழுவதும் கிருஷ்ணுவின் எல்லேக்குள் தான் இருந்தது.

[2]

நரஸோபாவின் தோட்டத்துக்குப் போன போது படகில் வண்டியை ஏற்றிவிட்டு நாங்கள் கிருஷ்ணுவைக் கடந்த சமயத்தில் நான் அவளே இரண்டாவது முறை தரிசித்தேன். இங்கே ஒரு புறம் பார்த்தால் உயர்ந்த கரைமேடு; மற்றெரு புறத்தில் வெகு தூரம் வரையில் பரவிய, கறுத்த வழவழப்பான சதுப்பு நிலமும் அதில் பயிரான கத்திரி, வெள்ளரி, கோசைக்காய், முலாம்பழம் — இவைகளின் பச்சைப் பசேலென்ற அமுத வயல் களும். கிருஷ்ணுவின் கரையில் காய்த்த இந்தக் கத்தரிக்காய்களே ஓரிரண்டு முறையாவது புசிப் பவன் ஸ்வர்க்கத்திலுங்கூட அவைகளே விரும்புவான். இந்தக் கத்தரிக்காய்களே ஒரேயடியாக இரண்டு மாதங்கள் வரையில் இடைவிடாமல் புசித்து வந் தாலுங்கூடத் திருப்தி உண்டாவதில்லே; இங்கிலேயில் அருசியைப் பற்றிய கேள்விக்கு இடமேது?

[3]

நான் முதன்முதலாக, ஸாங்க்லீயின் அருகில், கிருஷ்ணுவின் தடத்தின்மீது மஹாராஷ்டிரத்தின் ராஜ வைபவத்தைக் கண்டேன். அழகிலும் அழகிய பரந்த படித்துறைகள், மினுமினுக்கும் அழகிய குடங்களில் நீர் நிரப்பிச் செல்லும் மஹாராஷ்டிர மங்கையர், தண்ணீரில் குதித்துக் குதித்துக் கரையில் நின்றிருப்போரையும் மூழ்கடிக்க ஊக்கம் காட்டும் வீரம் செறிந்த பயில்வான்கள், மணிகளின் தாளம் கூடிய இசையால் தம் வரவை அறிவிக்கின்ற, பெரு வரைபோல் வீமவுடல் வாய்ந்த யானைகள், தமது கர்ர்ர்ர் என்னும் ஒரேவித ஒலியால் ரஸ-விருந்துக் கழைக்கும் கரும்புச் செக்குகள் — கிருஷ்ணு தேவியின் மூன்ருவது தரிசனம் இது.

எனக்கு அப்போது நன்ருக நீச்சலடிக்க வராது. ஆயினும் குடத்தைத் தண்ணீரில் கவிழ்த்துவைத்து அதன் உதவியால் மிதந்து செல்லும் எண்ணத்துடன் நான் ஒருமுறை நதியில் இறங்கியே தீர்த்தேன். ஆனல் ஓர் இடத்தில் சேற்றில் அகப்பட்டுக்கொண்டு விட்டேன்; ஒரு காலை எடுத்தால் மற்ரெுன்று இன்னும் ஆழமாக உள்ளே அமுங்கிவிடும். சேறுதான் எத்தகையது? ஒரே கறுப்பு, வெண்ணெயைப் போல் மிருதுவானது! ஜங்கமமாக இராமல் இனிப் பேர்வழி இங்கேயே தலைகீழான மரத்தைப் போல் தாவரமாகி விட வேண்டியதுதான் என்று நான் கருதிவிட்டேன். அன்றைக் கலக்கத்தை நான் இப்போதும் மறக்கவில்லை.

[4]

சிஞ்ச்லீ ஸ்டேஷனில் எங்களுக்குக் குடிக்க எப்போதும் கிருஷ்ணாவின் தண்ணீர் கிடைத்துவந்தது. அங்கே எங்களுக்குத் தெரிந்த ஒரு ஸ்டேஷன் மாஸ்டர் இருந்தார். எங்களுக்குத் தாகமிருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி; எங்கள் தகப்பனார் எங்களெல்லோரையும் பக்தியுடன் கிருஷ்ணாவின் தண்ணீர் குடிக்கவேண்டுமென்று சொல்வார். கிருஷ்ணா மஹாராஷ்டிரத்தின் ஆராத்திய தேவதை. அதன் ஒரு துளி வயிற்றில் சென்றால்கூட நாம் பவித்திரராகி விடுகிறோம். எவனுடைய வயிற்றில் கிருஷ்ணாவின் தண்ணீர் ஒரு துளியாவது சேர்ந்திருக்கிறதோ, அவன் தன் மஹாராஷ்டிரீயத் தன்மையை எப்போதும் மறக்க முடியாது. ஸ்ரீ ஸமர்த்த ராமதாஸரும் சிவாஜி மஹாராஜாவும், சாஹுஜியும் பாஜீராவும், ஸர்தார் கோர்படேயும் படவர்த்தனரும், நானா படநவீஸும் ராமசாஸ்திரி ப்ரபுணேயும் — சுருங்கக் கூறின், மஹாராஷ்டிரத்தின் தவப் பெருமையும் வீரத்தன்மையும், மஹாராஷ்டிரத்தின் நியாய நிஷ்டையும் அரசியல் ஞானமும், தருமமும் நல்லொழுக்கமும், தேசத்தொண்டும் கல்வித்தொண்டும், சுதந்திரமும் வள்ளன்மையும் — இவ்வெல்லாக் குணங்களும் கிருஷ்ணாவின் பரிவாரத்தில்தான் போஷணை பெற்றுப் பூத்துக் காய்த்துக் கனிந்தன. தீர்த்த ஸ்தானங்களாகிய தேஹு ஆளந்தீ இவைகளின் நீர் கிருஷ்ணாவில்தான் வந்து சேருகிறது. பக்திபுரியாகிய பண்டரபுரத்தின் சந்திரபாகா, 'பீமா' என்னும் பெயர் தாங்கி, கிருஷ்ணாவிலேயே வந்து கலக்கிறாள். 'கங்கையின் ஸ்நானம், துங்கையின் பானம்' என்ற

முதுமொழியில் பெரிதும் மதிக்கப்பட்ட துங்கபத் திரை, கர்நாடகத்தின் பண்டைய ஸாம்ராஜ்யத்தின் வைபவத்தை நினைவில் வைத்துக்கொண்டு, கிருஷ்ணை விலேயே வந்து மறைகிருள். உண்மையைக் கூறப் புகின் மஹாராஷ்டிரம், கர்நாடகம், ஆந்திரம் — ஆகிய மூன்று மாகாணங்களின் ஒருமையைச் சாதிப்பதற் காகவே கிருஷ்ணை பெருகி யோடுகின்ருள். இம்மூன்று மாகாணங்களும் கிருஷ்ணையின் பாலைப் பருகியிருக் கின்றன. மாகாணத்தன்மையின் எண்ணம் கிருஷ்ணை யினிடம் இல்லவே இல்லை.

[5]

கலாசாலையில் படித்துக்கொண்டிருந்த நாட்கள். பூனாவிலிருந்து பேரர்வல்கள் பலவுடன் என் அண்ண னைக் காண வீட்டுக்குச் சென்றேன்; ஆனால் நான் போவதற்கு முன்னமே அவர் இவ்வுலக வாழ்வை நீத்துவிட்டார். கிருஷ்ணையின் தூய நீரில் அவருடைய அஸ்திகளைக் குளிர்விப்பதுதான் என் விதியில் வரைந் திருந்தது. பெல்காமிலிருந்து நான் கூட்சிக்குச் சென்றேன். மாலை நேரம். ரயில் வாராவதியின் கீழே நான் கிருஷ்ணையுக்குப் பூஜை செய்தேன். அண்ணனின் அஸ்திகளைக் கிருஷ்ணையுக்கு அர்ப்பணம் செய்தேன். மூழ்கிவிட்டுக் கால்மேல் கால்போட்டு உட்கார்ந்து கொண்டு வாழ்வையும் சாவையும் பற்றி யோசனை செய்யலானேன். கிருஷ்ணையின் நீரில் எத்தனை மஹா ராஷ்டிரவீரர்களுடையவும் மஹாராஷ்டிரத்தின் பகை வர்களுடையவும் இரத்தம் கலந்திருக்கும்! சாதுர் மாஸ்யத்தின் மயக்கத்தில் மனம் போன வழியே ஓடும் கிருஷ்ணை, எத்தனை குடியானவர்களுக்கும் அவர்களின்

பசுமாடுகள் முதலிய மிருகங்களுக்கும் ஜல-சமாதி அளித்துவந்திருப்பாள்! ஆனால் இதனாலெல்லாம் கிருஷ்ணாவுக்கு ஆகவேண்டியது என்ன? மதோன் மத்தனான கஜராஜன் இவளுடைய ஜலத்தில் விஹாரம் செய்யட்டும், பற்றற்ற துறவி இவளது கரையில் தவம் புரியட்டும், கிருஷ்ணாவுக்கு இரண்டும் சமம் தான். என் அண்ணனின் அஸ்திகளுக்கும், கற்களாகச் சமைந்த மலைகளின் அஸ்திகளுக்கு மிடையே, கிருஷ்ணாவின் மனத்தில் என்ன வேற்றுமை உள்ளது? மாஹுலியில் என்னைத் தம் தோளில் சுமந்து கொண்டு நீரில் குதிப்பதற்கு ஊக்கமூட்டிய என் அண்ணனின் அஸ்திகளை நானே என் கைகளால் கிருஷ்ணாவின் நீரில் குளிர்விக்க நேர்ந்தது. அடைய இயலாத வாழ்க்கையின் இந்தப் போக்குத்தான் என்னே! அதன் விசித்திர விளையாடல்தான் என்னே!

[6]

கிருஷ்ணாவின் கர்ப்பத்தில் என் மற்றொரு சகோதரனுங்கூடத் தூங்கியிருக்கிறான்! பிரம்மசாரி அனந்த புவா மடேர்கர் உள்ளத்தின் பாவனையால் எனக்குத் தம்பியும், தேசத்தொண்டின் விரதத்தில் அண்ணனைப் போல் என் வணக்கத்திற்கு உரியவரும் ஆவர். ஸ்வதேசியம், நாட்டுக் கல்வி, பசுக்களின் தொண்டு — இவ்வேலைகளைச் செய்துகொண்டே அவர் உயிர் நீத்தார். என்னுடனே அவர் கங்கோத்திரிக்கும் அமரநாத்துக்கும் யாத்திரை செய்தார்; ஆனால் கிருஷ்ணாவின் கரைக்கு வந்துதான் அவர் அமரரானார். பக்தியின் ஆவேசத்தில் அவர் தன்னினைவு இழந்துவிடுவார்; நடந்துகொண்டே பலவிடங்களில்

தடுக்கி விழுவார். இமாலய யாத்திரையில் பல தடவை நான் இதைக் கண்டதுண்டு. நான் அடிக்கடி இதற்காக அவரைத் தடுத்து அதட்டியதுண்டு; ஆனால் அவர் அதைக் கொஞ்சமும் பொருட்படுத்தவே இல்லை. அவர் ஸ்ரீ ஸமர்த்த ராமதாஸரின் அருள்மயமான திருவாசகங்களின் சுவையிலேயே ஈடுபட்டு மயங்கியிருந்தார். கிருஷ்ணுவுக்கும் அவரை அதட்டவேண்டுமென்று தோன்றியிருக்கலாம். பாவம், சகோதரர் அனந்தர், கோயிலைப் பிரதக்ஷிணம் செய்துகொண்டே யிருக்கையில், மேலிருந்து கிருஷ்ணுவின் மடுவில் வீழ்ந்து விண்ணுடு சென்ருர். வாயியின் கற்கள் நிரம்பிய மைதானத்தில் ஓடும் கங்கையை நினைக்கும்போதும், ஒவ்வொரு சாதுர் மாஸ்யத்திலும் கிருஷ்ணுவில் தலை மூழ்கி ஸ்நானம் செய்யும் தெய்விகக் கோயில்களின் சிகரங்களைக் காணும்போதும், 'கிருஷ்ணுவின் அருகில் என் சகோதரன் ஒருவனும் நிரந்தரமாகப் போய்ச் சேர்ந்து விட்டான்,' என்ற ஞாபகம் எனக்கு வராமலிருப்பதில்லை; அந்தச் சகோதரனின் தவநிஷ்டையுள்ள, ஆனால் அன்பில் கனிந்த உருவம், என் கண் முன்பு நிற்காமல் போவதில்லை.

## [7]

அந்த 1921-வது வருஷம்! பாரத நாடு ஒரே வருஷத்தில் பூரண ஸ்வராஜ்யத்தை வாங்கிக்கொண்டு விடவேண்டுமென்ற சங்கற்பத்தை ஏற்றுக்கொண்டு விட்டது; ஹிந்துக்களும் முகம்மதியரும் ஒன்ருகி விட்டனர். முப்பத்துமூன்று கோடி தேவர்களைப் போல் பாரத நாட்டினரும் கோடிக்கணக்கிலே

சேர்ந்து யோசனை செய்யத் தொடங்கியுள்ளனர். ஸ்வராஜ்ய முனிவரான லோகமான்ய திலகரின் நினைவை எப்போதும் பசுமையாக வைத்திருக்கும் பொருட்டு 'திலகர் ஸ்வராஜ்ய நிதி'யில் ஒரு கோடி ரூபாய் சேர்க்கவேண்டும். தேசிய மகாசபையின் கொடியின்கீழ் வேலை செய்யும் அங்கத்தினர் ஒரு கோடிப் பேரைப் பதிவு செய்யவேண்டும். மேலும், திரௌபதியின் சேலையைவளர்க்கும் ஸ்ரீ கிருஷ்ணனின் ஸுதர்சன சக்கரத்தைப்போன்ற இராட்டினங்களை யும் இந்தத் தருமபூமியில் அதே கணக்கில் சுற்றச் செய்துவிடவேண்டும். பாரதத் தாயின் மைந்தர்கள் இப் பணியை நிறைவேற்றக் கருதி பெஜவாடாவில் ஒன்றுகூடி யிருந்தனர். ஸ்ரீ அப்பாஸ் ஸாஹப், ஸ்ரீ புண்தாம் பேகர், கிட்வானி அவர்கள், நான்—நாங்கள் எல்லோரும் ஒன்ருக பெஜவாடா வந்து சேர்ந்திருக் கிருேம். இத்தகைய மங்களமயமான வேளையில் ஸ்ரீ கிருஷ்ணும்பிகையின் விச்வரூப தரிசனம் செய்யும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. வாயியில் எந்த கிருஷ்ணுவின் கரையில் உட்கார்ந்து நான் ஸந்தியா வந்தனம் செய்தேனே, நியாய நிஷ்டரான ராம சாஸ்திரியைப் பற்றியும் அரசியல் நிபுணரான நானா படநவீஸைப் பற்றியும் பேசினேனே, அதே சின்னஞ் சிறிய கிருஷ்ணு இங்கே இத்தனை பெரியவளாகி யிருப்பதைக் கண்டு முதலில் எனக்கு நம்பிக்கையே உண்டாகவில்லை; மாஹுலியின் அந்தச் சின்னஞ் சிறு இருப்புச் சங்கிலி எங்கே? ஐரோப்பாவையும் அமெ ரிக்காவையும் பிணைக்கும் 'கேபிள்கள்' போன்ற இவ் விடத்துக் கயிற்றுச் சுருள்கள் எங்கே? ஆயிரக்கணக் கான, லட்சக்கணக்கான பேர் இங்கு குளிக்க வருகின்

றனர். ஸ்தூல தேகத்தினரான ஆந்திர சகோதரர் களில் இன்று பாரத நாட்டின் எல்லாச் சகோதரர் களும் கலந்திருக்கின்றனர். எங்கும் தேசீய ஹிந்தி யின் மாசற்ற மொழி வெள்ளம் காதில் விழுகின்றது. வேண்யாவும், வாரணுவும், கோயனுவும், பீமாவும், துங்கபத்திரையும் கிருஷ்ணுவிடம் வந்து சேருவது போலவே பலபல கிராமத்தினரும் கூட்டங் கூட்ட மாக வந்து பெஜவாடாவில் ஒன்றுகூடியிருக்கின்ற னர்! இத்தகைய தருணத்தில் நித்தியமும் கிருஷ்ணு வில் ஸ்நானம் செய்யும் லாபம் எங்களுக்கு வாய்த்தது. நாம் பிறந்த காலத்தில் நமக்குப் பாலே ஊட்டிய அதே கிருஷ்ணு, ஸ்வராஜ்ய விருப்பமுள்ள பாரத தேசத்தின் மேன்மை பொருந்திய தரிசனத்தையும் நமக்குச் செய்வித்தாள். போற்றி, ஓ கிருஷ்ணு! உனக்கு வெற்றியுண்டாகுக! ஹிந்துஸ்தானம் ஒன் ருகுக! அது விடுதலே எய்துக!

## 3. கங்கைத் தாய்

கங்காதேவி தேவவிரதனுன பீஷ்மனைப் பெற்றெடுத்த பெருமை யொன்றே அவளுக்குப் போதும்; அவள் வேறு ஒன்றுமே செய்யாதிருந்திருப்பினும் ஆரிய ஜாதியின் அன்னையாகவே கருதப்படுவாள். பீஷ்மனுடைய வயிர உறுதியும், பற்றெழிந்த தன்மையும், பிரம்மசரியமும், தத்துவ ஞானமும் ஆரிய ஜாதி என்றைக்கும் போற்றும்படியான ஆதர்சங்களாகிவிட்டன. இப்படிப்பட்ட மஹாபுருஷனின் தாய் என்ற உருவத்திலேயே நாம் கங்கையைக் காண்கின்றோம்.

நதிக்கு அழகான உவமை யொன்று சொல்ல வேண்டுமானுல், தாயைத்தான் கூறவேண்டும். நதி தீரத்தில் வசிப்பவர்களுக்குப் பஞ்சத்தின் பயம் உண்டாவதில்லை. முகிற் கணங்கள் நம்மை ஏமாற்றும் போது, நதித் தாய்தான் நம் பயிர் பச்சைகளைச் செழிக்கச் செய்கின்ருள். ஆற்றின் கரை சுத்தமாகவும் குளிர்ந்த காற்று வீசுவதாகவும் இருக்கும். அதன் கரையோரமாக உலவிக்கொண்டே சென்ருேமாயின், இயற்கை அன்னையின் இடையருத அன்பு வெள்ளத்தை நமது கண்களால் பருகலாம். நதி பெரிதாகவும், அதன் ஓட்டம் வேகமாகவும் ஆழ்ந்தும் இருந்தால், அதன் கரையில் வசிப்பவர்களின் உயர்நிலையும் சந்தோஷமும் அந் நதியைப் பொறுத்தவையே. உண்மையில், நதியே ஜன சமூகத்தின் தாய். ஒரு நதிக் கரையில் அமைந்த ஏதாவதொரு நகரத்தின் தெரு

விலே சுற்றிக் கொண்டிருக்கும்போது, ஏதோ ஒரு மூலையிலிருந்து நாம் நதியைக் காண்போமாயின், நமக்கு அந்தச் சமயத்தில் எவ்வளவு ஆனந்தம் உண்டாகின்றது! நகரத்தின் அசுத்தக் காற்று எங்கே? நதியின் ஆனந்தகரமான தரிசனம் எங்கே? அதே நிமிஷத்தில் அவ் விரண்டுக்குமுள்ள வித்தியாசம் நமக்குத் தெளிவாகத் தெரிந்துவிடுகிறது. நதி கடவுளல்ல; ஆனால் கடவுளை ஞாபகப்படுத்தும் ஒரு தெய்வமகள் என்பதில் ஐயமில்லை. குருவை வணங்குவது நியாயமாயின், நதியை வணங்குவதும் நியாயமே.

ஒரு சாதாரண நதிக்கே இவ்வளவு பெருமை உண்டென்றால், ஆரிய ஜாதியின் அன்னையான கங்கை விஷயத்தில் நான் யாது கூறுவேன்! ஆரியர்களின் பெரிய பெரிய ஸாம்ராஜ்யங்க ளெல்லாம் கங்கைக் கரையிலேயே ஸ்தாபிக்கப்பட்டுள்ளன. குரு-பாஞ்சால நாட்டை அங்கம், வங்கம் முதலிய தேசங்களோடு ஒன்றாக முடித்துப் போட்டவள் கங்கைதான். இன்றும் பாரத நாட்டின் பெரும்பாலான குடிகள் கங்கைக் கரையில்தான் வசிக்கிறார்கள்.

நாம் கங்கையைத் தரிசிக்கும்போது, காற்றிலே அலையோடும் பச்சைப் பசேலென்ற பயிர்கள் நம் நினைவில் வருவதில்லை; கங்கையோடு வியாஸ வால்மீகிகளின் அமர காவியங்களும், புத்த மஹாவீரர்களின் விஹாரங்களும், அசோகன் ஸமுத்திரகுப்தன் அல்லது ஹர்ஷனைப் போன்ற மஹா மண்டலாதிபதிகளின் பராக்கிரமமும், துளஸி கபீர் போன்ற பெரியார்களின் பாட்டுக்களுமே நம் நினைவுக்கு வருகின்றன. கங்கையின் தரிசனம், தண்மை தூய்மைகளின் பிரத்தியக்ஷ தரிசனமாகும்.

ஆனால் கங்கையின் காட்சி ஒரே விதமாய் இருப்பதில்லை. கங்கோத்திரியின் அருகில் பனியினால் மூடப்பட்ட இடங்களில் விளையாட்டில் ஈடுபட்ட அவளுடைய கன்னியுருவம், வடகாசிப் பக்கம் அகில் தேவதாரு முதலிய மரங்களின் காவியமயமான பிரதேசத்திலே அவளுடைய இளமை யுருவம், தேவப்பிரயாகையின் மலையிலும் குறுகிய இடங் களிலும் ஒளி வீசும் அலகநந்தாவுடன் அவளுடைய கேளிக்கைகள், லக்ஷ்மணஜூலாவின் கொடும் பற்களி லிருந்து விடுபட்டு ஹரித்துவாரத்தின் அருகில் பல கிளைகளாகப் பிரிந்து அவள் தன்னிஷ்டப்படி விளை யாடுவது, கான்பூரிலிருந்து பிரிந்து செல்லும் அவளு டைய சரித்திரப் பிரசித்தமான பிரவாகம், உயர் தீர்த்தமான பிரயாகையின் அகன்ற வெளியில் யமுனையுடன் அவளுடைய லோகபாவனமான திரிவேணீ சங்கமம் — ஒவ்வோர் அழகும் தனிமை யானதுதான். ஒரு காட்சியைக் கண்டு மற்றொரு காட்சியைக் கற்பனை செய்ய இயலாது. ஒவ்வொன் றின் மாகாத்மியமும் வெவ்வேறு.

பிரயாகையிலிருந்து கங்கை ஒரு தனியுருவம் பெறுகிறாள். கங்கோத்திரியிலிருந்து பிரயாகை வரை யில் கங்கை மேன்மேலும் வளர்ந்து பெருகினாலுங் கூட ஒரே உருவமாகக் கருதப்படுகிறாள். ஆனால் பிரயாகையின் அருகே அவளோடு யமுனையும் வந்து சேருகிறாள். யமுனையின் ஆகிருதியோ முதலிலிருந்தே இரண்டு மடங்கானது. அவள் விளையாடுகிறாள், குதிக்கிறாள் ; ஆனால் விளையாட்டில் ஈடுபட்டவளாகக் காணவில்லை. கங்கை சகுந்தலையைப் போன்ற தவ மகளாகத் தோன்றினால், கறுத்த யமுனையும் திரௌ

பதியைப் போன்ற மானமுள்ள ராஜகன்னிகையாகக் காணப்படுகிருள். சர்மிஷ்டை தேவயானிகளின் கதையைக் கேட்கும்போது, பிரயாகையின் அருகில் மிகக் கஷ்டத்தோடு கலக்கும் வெண்மையும் கறுப்புமான கங்கை யமுனே ஆறுகளின் வெள்ளமே நம் நினைவில் வருகிறது.

பாரத தேசத்தில் எண்ணிறந்த நதிகள் இருக்கின்றன. நதிகளின் சங்கமங்களும் பல உள்ளன. நம் பெரியோர்கள் இவ் வெல்லாச் சங்கமங்களைக் காட்டிலும், கங்கையும் யமுனையும் அன்போடு சேருவதையே மிகவும் அதிகமாக விரும்பினர். அதனுல் தான் அதற்குப் 'பிரயாக ராஜன்' என்ற கௌரவமான பெயரையும் வைத்தனர். முகம்மதியர்கள் வந்த பின்பு இந்தியாவின் சரித்திர உருவம் மாறியது போலவே, டில்லி, ஆக்ரா, மதுரை, விருந்தாவனம் இவற்றின் அருகிலிருந்து வரும் யமுனையின் வெள்ளத்தினுல் கங்கையின் உருவமும் முற்றிலும் மாறிவிட்டது.

பிரயாகையைத் தாண்டியதும், கங்கை ஒரு குலமகளைப் போல் கம்பீரமாகவும் சௌபாக்கியவதியாகவும் காண்கிருள். இதற்குப் பின் கங்கையுடன் பெரிய பெரிய நதி-மங்கையர் வந்து கலக்கின்றனர். யமுனே மதுரை, விருந்தாவனம் இவற்றிலிருந்து ஸ்ரீ கிருஷ்ணனின் நினைவுகளைக் கொணர்ந்து சமர்ப்பிக்கிருள். அயோத்தியின் வழியாக வரும் ஸரயூ, ஆதர்ச சக்கரவர்த்தியான இராமபிரானின் பிரதாபம் நிறைந்ததும் கருணை ததும்பியதுமான வாழ்க்கையின் நினைவுகளைக் கொணர்கிருள். தெற்கிலிருந்து வரும் சம்பல் நதி, ராஜா ரந்திதேவனின் யக்ஞ யாகங்களின்

கதைகளைச் சொல்லுகிருள். அப்போது மிகவும் கோலாகலத்தோடு வரும் சோணபத்திரம் என்ற ஆறு, யானையும் முதலையும் பயங்கரமாகப் போரிட்ட காட்சியை நமக்குக் காட்டுகிறது. இவ்வாறு வன்மை யும் வளர்ச்சியும் பெற்ற கங்கை, பாடலிபுரத்தின் அருகே செல்லும் போது, மகத சாம்ராஜ்யத்தைப் போல் விசாலமாகிவிடுகிருள். அந் நிலையிலும், கண்டகி தன் விலையில்லாக் காணிக்கைகளை அவளுக்கு அர்ப்பிக் கக் கூசுவதில்லை. ஜனக-அசோகர்கள், புத்த - மஹா வீரர்களின் பழைய நாட்டைக் கடந்த பின்பு, தான் இனி எங்கே செல்லலாம் என்ற யோசனையில் அவள் ஆழ்ந்துவிடுகின்ருள். பிரசண்டமான ஜலப்பிரவா கம் மட்டற்ற வேகத்தோடு கிழக்கு முகமாக ஓடிக் கொண்டிருக்கும் போது அதைத் திடீரெனத் தெற்கு முகமாகத் திருப்புவது சாமானியமான காரியமா? ஆயினும் அவள் தென்திசையில் திரும்பிவிடுகிருள். இரண்டு சக்கரவர்த்திகளேனும், இரண்டு ஜகத்குருக் களேனும் ஒருவரோடு ஒருவர் சேரமாட்டார்கள்; அவர்களைப் போன்றவர்களே கங்கையும் பிரம்ம புத்திராவும். பிரம்மபுத்திரா அந்தப் பக்கத்திலுள்ள ஜலராசியைக் கூட்டிக்கொண்டு ஆஸாம் வழியாக மேற்கே செல்லுகிருள். கங்கை மறுபக்கம் கிழக்கே செல்லுகிருள். இருவரும் ஒருவரை யொருவர் காண் பது எங்ஙனம்? யார் முதலில் தாழ்வது? யார் முதலில் வழி விடுவது? கடைசியில் இருவரும் தாக்ஷிண்யத்தைக் கருதி, அதாவது ஒருவரை யொரு வர் சந்தோஷப்படுத்தவேண்டு மென்னும் பெரு நோக்கத்துடன், சமுத்திரராஜனைத் தரிசிக்கச் செல்ல வேண்டுமென்றும், பக்தியுடன் வணங்கிச் செல்லும்

வழியில் தம்மால் இயன்ற விடத்தில் இருவரும் ஒன்று சேர்ந்துவிடுவதென்றும் தீர்மானித்தனர்.

இவ்வாறு, கோலந்தோ என்னும் இடத்திற்கு அருகில் கங்கையும் பிரம்மபுத்திராவும் ஒன்று சேர்கின்றனர். அவ்விடத்தில் ஏற்படும் அகன்ற நீர்ப்பரப்பைக் காண்பவர்களுக்கு, 'இதைவிடக் கடலென்பது வேறு ஒன்று உண்டோ?' என்ற ஐயம் உதிக்கும். வெற்றி யடைந்த பின்பு சேனைகள் சிதறிப் போவது போலவும், ஜயமடைந்த வீரர்கள் இங்குமங்கும் சுற்றித் திரிவது போலவும், இந்தச் சங்கமத்துக்குப் பிறகு இவ்விரு நதிகளும் பல முகங்களாகப் பிரிந்து கடலில் கலக்கின்றனர். கங்கையும் பிரம்மபுத்திராவும் ஒன்ருகிப் 'பத்மா' என்னும் பெயர் பெறுகின்றனர். இந்தப் பத்மாவே, பின்னும் மேலே சென்றபோது, 'மேகனு' என்று அழைக்கப்படுகின்ருள்.

இந்த ஆயிர முகங்களுள்ள கங்கை எங்கே போகிருள்? சுந்தரவனத்தில் மூங்கிற் காடுகளை வளர்ப்பதற்கா, அல்லது சகர புத்திரர்களின் ஆசையை நிறைவேற்றி அவர்களை உத்தாரணம் செய்வதற்கா? இன்று நீங்கள் அங்கே சென்று பார்த்தீர்களானுல், பழங்காலத்து விஷயம் ஒன்றுமே இராது. கண்டகண்ட இடத்திலெல்லாம் சணலினுல் கோணிகள் செய்யும் ஆலைகளும், அவற்றைப் போன்ற விகாரமான வேறு தொழிற்சாலைகளும். அங்கே நிற்கின்றன. எந்த இடத்திலிருந்து இந்தியக் கைத்தொழிலின் எண்ணற்ற பொருள்கள் இந்தியக் கப்பல்களில் ஏற்றப்பட்டு, இலங்கை, ஜாவா முதலிய தீவுகள் வரையில் அனுப்பப்பட்டு வந்தனவோ, அவ்விடத்திலிருந்தே சீமைக் கப்பல்களும், ஜப்பானியக்

கப்பல்களும், வெளிநாட்டு ஆலேயில் செய்த குப்பைச் சாமான்களினுல் இந்தியாவின் கடைத் தெருக்களே நிரப்புவதற்காக வருவதை இன்று நாம் காணலாம். கங்கைத் தாய் இன்றும் முன் போன்ற வளத்தையேதான் நமக்கு அளிக்கிருள்; ஆனுல் நம்முடைய வன்மையிழந்த கைகளால் அந்த வளத்தைத் தாங்க முடியவில்லே. கங்கைத் தாயே! துன்பம் தரும் இக் காட்சியைக் காணும் தலே யெழுத்து உனக்கு இன்னும் எவ்வளவு காலம் இருக் கப்போகிறது!

## 4. யமுனை ராணி

இமயமலை உண்மையில் அழகின் களஞ்சியமாகும். சுற்றிலும் தன் எழிலைப் பரப்பி அழகின் அழகையே குறைத்துக் கொண்டிருப்பது அதன் வேலை. அப்படி யிருந்தும், இமயமலைவாசிகளின் கவனத்தைத் தன் புறமாக ஈர்க்கும் ஒளிமயமான இடம் ஒன்றும் இமயமலையிலே இருக்கிறது. யம தரும ராஜனின் தங்கைக்கு இது பிறப்பிடமாகும்.

உயரத்திலிருந்து பனிக்கட்டிகள் கரைந்து கரைந்து ஒரு பெரிய நீர்வீழ்ச்சி போல் விழுகின்றன! அக்கம் பக்கத்திலுள்ள, — வானத்தைத் தொடுவன அல்ல, — வானத்தைப் பிளக்கும் பழைய பெரிய பெரிய மரங்கள் குறுக்கே வீழ்ந்து நைந்து போகின்றன. மிக மிக உயரமான மலைகள் யமதூதர்களைப் போல் காவல் காக்க நிற்கின்றன. ஒரு மணி நேரத்தில் தண்ணீர் உறைந்து பனிக்கட்டி யாகிவிடுகிறது. சிறிது நேரத்திலேயே அது உருகிப் பனிக்கட்டியே போல் குளிர்ந்த நீர் பெருகத் தொடங்குகிறது. இத்தகைய இடத்தில் ஒரு விசித்திர விதமாகப் பூமியினுள்ளிருந்து பொங்கிய நீர் மேலெழும்பி வருவதுடன், எஞ்சினிலிருந்து மிக வேகமாக நீராவி வெளிவருவது போன்ற ஒரு சத்தமும் பூமியினின்றும் கிளம்புகிறது. இந்த அருவிகளினின்றும் தலைக்கு மேலாக உயரத்தில் பறக்கும் உஷ்ண நீரின் துளிகள் இத்தனை குளிர்ச்சியிலும்கூட மனிதனை எரித்துவிடுகின்றன! உலகத்திலேயே அற்புதமான இந்த இடத்தில்தான் அஸிதர் என்னும் ரிஷி ஒருவர் யமுனையின் மூலஸ்தானத்

தைக் கண்டுபிடித்தார். இவ்விடத்தில் தெளிந்த நீரில் மூழ்குவதோ அசாத்தியமான காரியம். குளிர்ந்த நீரில் மூழ்கினுல் எப்போதைக்கும் குளிர்ந்துவிட வேண்டியதுதான்! வெந்நீரில் ஸ்நானம் செய்தாலோ அங்கேயே உருளைக் கிழங்கைப் போல் வெந்துவிட வேண்டியதுதான்! ஆகையினுல்தான் அங்கே குளிர்ந்த நீரும் வெந்நீரும் கலந்த ஜலகுண்டங்கள் தயாரிக்கப்பட்டுள்ளன. ஓர் அருவியின் மேலே குகையொன்று இருக்கிறது. இதில் மரப் பலகைகளை அமைத்துத் தூங்கலாம்; ஆனுல் இரவெல்லாம் புரண்டுகொண்டே இருக்கவேண்டி வரும். மேலே குளிர், கீழே உஷ்ணம்; இரண்டும் சகிக்க முடியாதன!

இரு சகோதரிகளிலும், கங்கையைக் காட்டிலும் யமுனை பெரியவள், பூரண யுவதி, புத்தியறிந்தவள், கம்பீரமானவள். அவள் கிருஷ்ணனின் தங்கையான திரௌபதியைப் போலவே கறு நிறத்தவளாயும், அவ்வண்ணமே மானமுள்ளவளாயும் இருக்கிருள். கங்கை, பாவம், மங்கை சகுந்தலைதான் போலும்! ஆயினும் தேவாதிதேவன் அவளை அங்கீகரித்துவிட்டான். ஆகவே யமுனை தன் பெருந்தன்மையை விட்டுக் கொடுத்துக் கங்கைக்கே தன் பெருமையை அளித்துவிட்டாள். இவ்விரு சகோதரிகளும் ஒருவரோடொருவர் சேருவதற்குப் பேராவலுள்ளவர்களாகத் தோன்றுகிருர்கள். இமயமலையில் ஓரிடத்தில் இருவரும் மிகவும் சமீபமாக வந்துவிடுகின்றனர்; ஆனுல் பொருமை கொண்ட தண்டால் மலை, இடையில், விக்கின-சந்தோஷியைப் போல் குறுக்கே வந்து, அவர்களைச் சந்திக்க விடவில்லை. கவி-மனம் படைத்த முனிவர் ஒருவர் யமுனைக் கரையில் வசித்து வந்தார்;

ஆனல் அவர் மூழ்கிவந்தது கங்கையிலே; பின்பு சாப்பாட்டுக்குத் திரும்பத் தம் யமுனையின் வீட்டுக்கே வந்துவிடுவார். அவர் கிழவராகிவிட்டவுடன் — கடைசியில் முனிவர்களும் கிழவர்களாகித்தான் விடுகின்றனர் — அவருடைய களைத்துப்போன திருவடிகளின்மீது அருள் கூர்ந்து, கங்கை தன் பிரதிநிதியாகிய ஒரு சிறிய நீரோடையை யமுனைக் கரையிலிருந்த அம்முனிவரின் ஆசிரமத்துக்கு அனுப்பிவிட்டாள். இன்றும் அந்தச் சிறிய வெள்ளிய நீரோடை அந்தக் கிழ முனிவரின் ஞாபகத்துடன் ஓடிக்கொண்டிருக்கிறது.

தெஹராதூனுக்கு அருகிலும்கூட இவ்விரண்டு நதிகளும் ஒன்ருேடொன்று கலக்குமென்ற நம்பிக்கை நமக்குத் தோன்றுகிறது. ஆனல் அப்படியில்லை; தமது தண்மையினுலும் தூய்மையினுலும் அந்தர்வேதி (கங்கைக்கும் யமுனைக்கும் இடையேயுள்ள இடம்) யின் எல்லாப் பிரதேசத்தையும் பவித்திரமாக்கும் தம் பணியைப் பூர்த்தி செய்வதற்கு முன்பு, அவை தமக்குள் சந்தித்து ஒழிவாகப் பேச நினைப்பதுதான் எங்ஙனம்? கங்கை வடகாசி, டேஹரி, ஸ்ரீநகர், ஹரித்வார், கன்ேஜ், பிரம்மாவர்த்தம், கான்பூர் முதலிய பண்டைய சரித்திரப் பிரசித்தமான இடங்களுக்குத் தன் பாலை யூட்டிக் கொண்டு ஓடும் அதே சமயத்தில், யமுனையும் குருக்ஷேத்திரத்திலும் பானிபட்டிலுமுள்ள கொலைக்கள மைதானங்களைப் பார்த்துக்கொண்டு, ஹிந்துஸ்தானத்தின் இராஜதானிக்கருகே சென்று விடுகிருள். யமுனையின் நீரில் சாம்ராஜ்யத்தின் சக்தி இருக்கத்தான் வேண்டும். அவளுடைய நினைவுத் தொகுதிச் சாலை

யில், பாண்டவர்கள் தொட்டு முகலாய சாம்ராஜ்யம் வரையிலும், சிப்பாய்க் கலகம் தொடங்கி ஸ்வாமி சிரத்தானந்தரின் கொலை முடிய, முழுச் சரித்திரமும் நிரம்பிக் கிடக்கின்றது. டில்லியிலிருந்து ஆக்ரா வரையிலும் பாபரின் குடும்பத்தார்தான் நம்மோடு பேசிக்கொண்டு வருகிறுர்களோ என்று நமக்குத் தோற்றுகிறது. அவ்விரு பட்டணங்களின் கோட்டைகளும்-ராஜ்யத்தைக் காப்பதற்காக அல்ல-யமுனையின் அழகைக் காண்பதற்காகவே கட்டப்பட்டனபோலத் தோன்றுகின்றன. முகல் சாம்ராஜ்யத்தின் முரசுகள் அடிப்பதோ நின்றுபோய்விட்டது; ஆனுல் கோகுல - விருந்தாவனத்தின் மோஹன வேய்ங்குழலோ இப்போதும் ஒலித்துக்கொண்டிருக்கிறது.

மதுரை-விருந்தாவனத்தின் சோபையே தனிப்பட்டது. இந்தப் பிரதேசம் எவ்வளவு ரமணீயமோ அவ்வளவு வளமுடையதாயும் இருக்கிறது. ஹரியாணுவின் பசுக்கள் தம் இனிய புஷ்டிகரமான பாலுக்கு ஹிந்துஸ்தானம் முழுவதிலும் பேர் போனவை. யசோதைத் தாயும் இடையர்களின் அரசனுன நந்தகோபனும் தாமே இவ்விடத்தை விரும்பினுர்கள்; இவ்விஷயத்தை இந்தப் பூமி மறக்கவே முடியாது போலிருக்கிறது. மதுரை-விருந்தாவனம் — பாலகிருஷ்ணனின் கிரீடா பூமி, வீர ஸ்ரீகிருஷ்ணனின் பராக்கிரமத் தலம்! துவாரகை வாசத்தின் கதையை நீக்கிவிட்டால், ஸ்ரீகிருஷ்ணனின் வாழ்க்கையோடு மிகமிக நெருங்கிய கூட்டுறவு கொண்டவள் யமுனை ராணிதான். காளிய மர்த்தனத்தைக் கண்ட அதே யமுனை, கம்ஸனின் தலை அறுபடுவதையும் கண்டாள். ஹஸ்தினுபுரத்து ராஜ

சபையில் தூதுசென்ற ஸ்ரீகிருஷ்ணனின் சொல்லைச் செவியுற்ற அதே யமுனை, குருக்ஷேத்திரத்தில் போரில் வல்லவனான ஸ்ரீகிருஷ்ணனின் யோகமூர்த்தி நடமாடுவதைக் கண்டாள். விருந்தாவனத்தின் காதல் - வேய்ங்குழலின் மதுர ஆலாபனத்தோடு தன் கலகலப்பு ஒலியைக் கலந்த அதே யமுனை, பயங்கரமான குருக்ஷேத்திரத்தில் மயிர் சிலிர்க்கச் செய்யும் கீதை உபதேசத்தை எதிரொலிக்கச் செய்தாள் — மீட்டும் சொன்னாள். யமராஜனின் தங்கைக்குச் சகோதரனாக இருப்பது ஸ்ரீகிருஷ்ணனுக்குத்தான் அடுக்கும்.

பாரதநாட்டு க்ஷத்திரிய குலத்தின் ஸம்ஹாரத்தைப் பல முறைகள் கண்டிருந்த யமுனைக்குப் பாரிஜாத மலரினும் கோமளமான மும்தாஜ்மஹலின் முடிவு எவ்வளவு இருதய - பேதகமாக இருந்திருக்கும்? ஆயினும் அவள், காதல் - சக்கரவர்த்தியான ஷாஜஹானின் உறைந்த கண்ணீரைப் பிரதிபலிக்கச் செய்ய ஒப்புக்கொண்டுவிட்டாள்.

ராஜா ரந்திதேவனால் பாரத காலத்திலிருந்து பிரசித்தமான வைதிக நதியாகிய சர்மண்வதியிலிருந்து தன் கப்பத்தை வாங்கிக்கொண்டு யமுனை மேலே செல்ல ஆரம்பிக்கும் போதே, இடைக்காலத்துச் சரித்திரத்தைப் பளிச்சென்று காட்டி மறைக்கும் சின்னஞ் சிறு சிந்துநதி அவளுடன் வந்து கலக்கிறாள்.

இப்போது யமுனை ஆத்திரமடைகிறாள். ‘இத்தனை நாட்களாகியும் சகோதரி கங்கையைக் காணவில்லையே! அவளுக்குச் சொல்லவேண்டிய விஷயங்களோ வயிற்றில் இடங் கொள்ளாதபடி வளர்ந்து விட்டன. கேட்பதற்கு எண்ணிலாக் கேள்விகளும் குவிந்துவிட்டன!’ என்று அவள் கருதுகிறாள். கான்

பூரும் கால்பீயும் வெகு தொலேயில் இல்லே. இங்கே கங்கையின் செய்தியைக் கேட்டு, அந்த ஆனந்தத்தில் கற்கண்டு தின்று தன் வாயை இனிப்பாக்கிக் கொண்ட பின், யமுனே ஓடிச் சென்று, தீர்த்த-ராஜனை பிரயாகையில் கங்கையின் கழுத்தை அணைத்துக் கொள்ளுகிருள். இருவரின் அன்புப் பித்துத்தான் எத்தகையது! சந்தித்த போதுங்கூட, 'நாம் சந்தித்தோம்' என்ற நம்பிக்கை அவர்களுக்கு உண்டாகவில்லே. பாரத நாட்டின் மூலே முடுக்குகளிலிருந்து சாதுக்களும் பக்தர்களும் இந்தப் பிரேம சங்கமத்தைத் தரிசிப்பதற்காக ஒன்றுகூடியிருக்கிருர்கள். ஆனுல், இரு சகோதரிகளுக்கும் அதைப் பற்றிய அச்சம் ஏதுமில்லே. தமது முற்றத்தில் அக்ஷயவடம் நின்றிருப்பதைப் பற்றிக்கூட அவர்களுக்கு அக்கரை இல்லே. கூடாரமடித்துத் தங்கியிருக்கும் கிழ அக்பரை விசாரிப்பதற்கு யாருக்குத்தான் ஓய்வு கிடைக்கிறது? அசோகனின் ஸ்தம்பத்தையே அங்கே கொண்டு நிறுத்திவிட்டாலும், அந்தச் சகோதரிகள் அதைக் கண்ணெடுத்துப் பார்ப்பார்களென்று நீங்கள் நினேக்கிறீர்களா?

அன்பு வெள்ளம் அகண்டமாகப் பெருகுகிறது; அதோடு கூடவே கவிச்சக்கரவர்த்தியான காளிதாஸனின் சரஸ்வதியும் அகண்டமாக ஓடிக்கொண்டிருக்கின்றது!

**क्वचित् प्रभालेपिभिरिन्द्रनीलैर्मुक्तामयी यष्टिरिवानुविद्धा ।**
**अन्यत्र माला सितपङ्कजानामिन्दीवरैरुत्खचितान्तरेव ॥**

**क्वचित् खगानां प्रियमानसानां कादम्बसंसर्गवतीव पंक्तिः ।**
**अन्यत्र कालागरुदत्तपत्रा भक्तिर्भुवश्चन्दनकल्पितेव ॥**

**क्वचित् प्रभा चान्द्रमसी तमोभिश्छायाविलीनैः शबलीकृतेव।**
**अन्यत्र शुभ्रा शरदभ्रलेखा रन्ध्रेष्विवालक्ष्यनभःप्रदेशा॥**
**क्वचिच्च कृष्णोरगभूषणेव भस्माङ्गरागा तनुरीश्वरस्य।**
**पश्यानवद्याङ्गि! विभाति गङ्गा भिन्नप्रवाहा यमुनातरङ्गैः॥**

[மாசற்ற அங்கங்களையுடைய ஹே சீதையே! யமுனையின் அலைகளினால் கங்கையின் வெள்ளம் வேறுபடுத்தப்பட்டு விளங்குவதைப் பார். சில இடங்களில் முத்துமாலையில் கோக்கப்பட்ட இந்திர நீலம் முத்தின் ஒளியை மங்கச்செய்வது போலவும், சில இடங்களில் வெண்தாமரை மலர் மாலையில் கருநெய்தல் பூக்கள் கோக்கப்பட்டன போலவும், வேறு சில இடங்களில் மானதவாவிக்குச் செல்லும் வெள்ளை ஹம்ஸங்களுடன் கறுநிறக் காதம்பப் பறவைகள் பறந்தோடுவது போலவும், சில இடங்களில் வெண் சந்தனத்தால் மெழுகப்பட்ட தரையில் காரகிலின் கோலங்கள் இடப்பட்டன போலவும், மற்றும் சில இடங்களில் சந்திரனின் ஒளியுடன் நிழலில் மறைந்த அந்தகாரம் விளையாடுவது போலவும், வேறு சில இடங்களில் சரத் காலத்து மேகங்களின் பின்னாலிருந்து துவாரங்களின் மூலம் ஆகாயத்தின் நீலநிறம் சிறிது சிறிது தென்படுவது போலவும், மற்றும் சில இடங்களில் சிவபெருமானின் சாம்பல் பூசிய திருமேனியின் மீது கன்னங்கரிய பாம்புகளின் ஆபரணங்கள் அணிவிக்கப்பட்டன போலவும் தோற்றுகிறது.]

எத்தனை அழகிய காட்சி! மேலே புஷ்பக விமானத்தில், மேகவண்ணனான ராமனும், மறுவிலா வெண்ணிறச் சீலமுள்ள சீதையும், பதினான்கு வருஷப் பிரிவுக்குப் பின்பு, அயோத்திக்குப் போய்ச்

சேரப் பேராவல் கொண்டிருக்கின்றனர்; கீழே, குவளை மலர் போல் கறுநிறத்தளான யமுனையும் அமுத நீரினளான கங்கையும், ஒருத்தி மற்றவளின் இறுகிய ஆலிங்கனத்தை விடாமலே, நெடுங்கடலில் தமது பெயரையும் உருவையும துறந்து லயித்து விடுவதற்காக ஓடிச் செல்லுகின்றனர்.

இக் காட்சியைக் கண்டு ஸ்வர்க்கத்திலிருந்து நிச்சயமாக மலர் மழை பொழிந்திருக்கும்; பூமியிலும் கவிகளின் நவநவமான சிந்தனையில் உதித்த சுனைகள் குளிர் இளந் திவலைகளைச் சொரிந்திருக்கும்!

## 5. நதியின் மேல் கால்வாய்

ஆவணி மாதத்துப் பூர்ணிமை-அதாவது பூணூல் மாற்றும் தினம்; பிராமணத்தன்மையை மறந்து விட்டால், இது சகோதரிகள் ரட்சை கட்டும் நாள். அன்று நாங்கள் ருட்கீ போய்ச் சேர்ந்தோம். விளை யாட்டுப் பேர்வழியான வேணீபிரஸாத் ஒரு நிமிஷத் தில் எங்களோடு கலந்துவிட்டான். 'காகாஜீ, இன்று தங்கள் கையால்தான் நான் பூணூல் வாங்கிக் கொள்வேன். இங்குள்ள பிராமணர்கள் வேத மந்திரங்களைச் சரிவரச் சொல்லுவதில்லை. தாங்கள் மஹாராஷ்டிரர். தாங்களே எனக்குப் பூணூல் கொடுங் கள்' என்ருன். வேணீபிரஸாதின் மாமா பெரிய பக்தர். அவரோடு பூணூலைப் பற்றிய பேச் சுக்கள் நடந்தன. வட இந்தியப் பிராமணர்கள், 'மூன்று த்விஜ வருணத்தினரும் பூணூல் தரிக்கவேண் டும்; சந்தியை முதலிய நித்திய கருமங்களைச் செய்ய வேண்டும்' என்று விரும்புகின்றனர்; ஆனுல் இது விஷயத்தில் ஜனங்களுக்குப் பெரிதும் அசிரத்தை யாக இருக்கிறது. தெற்கே பிராமணரல்லாதார் பூணூல் தரிக்க விரும்பும் நிலையில், மஹாராஷ்டிரத்து அந்தணர்கள், 'கலௌ ஆத்யந்தயோ: ஸ்திதி:' [கலியில் முதலும் கடைசியும் நிலைத்துள்ளன] என்ற வசனப்படி, இடையேயுள்ள இரண்டு வர்ணங்கள் — க்ஷத்திரிய வைசிய வர்ணங்கள்— இல்லவே யில்லை யென்று பொருத்தமற்ற பிடிவாதம் பிடிக்கின்றனர். (ஆனுல் பாக்கியவசமாக இப்போது இந்த நிலைமை இல்லை.) பூணூல் தரிக்க அதிகார முள்ளவர்களுக்கு

அதைத் தரிப்பதில் ருசியில்லை. முரண்டியாவது பூணூல் தரிக்கும் அதிகாரத்தைப் பெற வேண்டுபவர்களுக்குத் தம் த்விஜத்தன்மையை நிரூபிப்பதற்காகப் பல கஷ்டங்களை எதிர்க்க வேண்டி வருகிறது. இந்தப் பேச்சுக்களைக்கேட்டதும் தனக்கு இன்று பூணூல் கிடைக்காதென்று வேணிக்குத் தோன்றியது. ‘கலியுகத்தில் எதுதான் நடைபெற முடியாது? ஒரு நதியின் மீது மற்றொரு நதி சவாரி செய்யக் கூடுமானால் ஒரு மஹாராஷ்டிர அந்தணரும் எங்களுக்குப் பூணூல் கொடுக்க முடியும்’ என்று அவன் நியாயம் காட்டினான்.

அதிலிருந்து எங்கள் பேச்சின் விஷயம் மாறியது; கலியுக பகீரதர்களின் பராக்கிரமத்துக்கு எடுத்துக் காட்டாக அமைந்துள்ள கங்கையின் கால்வாயைப் பற்றிய பேச்சு வந்தது. பகலில், நாங்கள் மனிதனுடைய நிர்மாணக் கலையின் இந்த அசாதாரணமான மாதிரியைப் பார்க்கச் சென்றோம். கங்கையின் கால்வாய் ருட்கி நகரத்தின் அருகிலிருந்து புறப்பட்டிருக்கிறது. பையன்கள் இந்தக் கால்வாயில் மீன்களைப் போல ‘முக்குளித்து’ விளையாடிக் கொண்டிருந்தார்கள். கால்வாயின் கரையோரமாகவே நாங்கள் அந்தப் பிரசித்தமான வாராவதி வரையில் போனோம். உண்மையில் அது ஒரு மனோஹரமான காட்சி. வாராவதிக்குக் கீழே, ஓர் ஏழைப் பிராம்மணியைப் போல், ஸோலானு நதி ஓடிக்கொண்டிருந்தாள். அவளுக்கு மேலே, கங்கையின் கால்வாய், தன் அகன்ற பரப்பைச் சிறிதுகூடச் சுருக்கிக் கொள்ளாமல், வாராவதியில், வெகு வேகத்துடன் ஓடிக்கொண்டிருந்தது. அவ் வாராவதியின்மீது

நீரின் பெரும் பாரம், அப்போதே அதன் சுவர்கள் உடைந்து இருபுறமும் யானைகளின் பாரத்தைப் போன்ற பெரிய தாரைகள் வெள்ளமெடுத்து ஓடுமோ என்று நினைக்கும்படியாக இருந்தது. வாராவதி யின் சுவர்மேல் நின்றுகொண்டு கால்வாயின் வெள் ளத்தை எட்டிப் பார்த்தால் தலை சுற்ற ஆரம்பிக் கிறது. துன்பப்படும் மனிதனின் மூளையில் உத் வேகம் புதிது புதிதாகப் பொங்கி எழுவது போல், கால்வாயின் நீரும் பொங்கி எழுந்துகொண்டிருந்தது. ஆனால் புக்ககத்தில் வந்த புது நாட்டுப்பெண் தன் மனத்திலுள்ள எழுச்சிகளை யெல்லாம் அடக்கிவைத் துக்கொள்வது போல், கங்கை நதியின் இந்தப் பரா தீனப் பெண்ணும், தன் பொங்கும் எழுச்சிகளை யெல் லாம் அடக்கிவைத்துக்கொண்டிருக்கிறாள். முதன் முதலில் அவளைக் காணும்போது அவளுடைய விஸ் தாரத்தைக் கண்டு, 'இவள் ஒரு கர்வம் பிடித்த வணிகப் பெண்ணோ?' என்று தோற்றுகிறது. ஆனால் வெகு சமீபத்திலிருந்து பார்த்தால், பணக்காரத் தன்மையின் கீழே பராதீனத்தின் துன்பம் அவள் முகத்தில் தெளிவாக வீசுவது புலப்படுகின்றது.

ஸோலானு நதியின் மெலிந்த, ஆனால் சுதந்தர மான பிரவாகம் மேலிருந்து பார்க்கும் போது மனத் தைப் பெரிதும் கொள்ளைகொள்கிறது. கால் வாயின் இருபுறத்துச் சுவர்களிலும் வடிகால்களுக் காக அமைக்கப்பட்டிருந்த சில துளைகளிலிருந்து கால்வாயின் தண்ணீர், தான் ஏதோ பேருதவி புரிவது போல், கொஞ்சம் கொஞ்சமாக ஸோலானுவில் விழுந்துகொண்டிருந்தது; இந்த ஒரு விஷயம்தான் மனத்துக்குப் பிடிக்கவில்லை.

நாங்கள் வாராவதியிலிருந்து கீழே இறங்கி வந்து ஸோலாஞுவின் கரையில் உட்கார்ந்து கொண்டோம். ஸோலாஞு அந்த உபகாரத்தை ஏற்றுக் கொள்ளாதபடி அவ்வளவு அபிமானமுள்ளவளுமல்ல; பிறரின் அருள்விழியை எதிர்நோக்கி உட்கார்ந்திருக்கும்படி அவ்வளவு ஈனமானவளுமல்ல. ஈனத் தன்மை அவளிடம் இல்லவே இல்லை; அபிமானத்தைப் பாராட்டும் தன்மையோ அவளுக்கு அழகு அளிப்பதாக இல்லை. அவளது கபடமற்ற சுபாவம், முயற்சியால் சம்பாதிக்கப்பட்ட உன்னதமான ஒழுக்கத்தைக் காட்டிலும் மிகவும் அதிகமாக ஒளி வீசியது.

பகீரதக் கல்வியில் (Irrigation Engineering) தண்ணீரின் பிரவாகத்தை மேலே கொண்டுசெல்வதற்கு ஆறு உபாயங்கள் கூறப்பட்டுள்ளன. இவைகளில் எல்லாவற்றையும்விட அற்புதமும் மிகக் கடினமுமானது, ஒரு வெள்ளத்தை மற்ருெரு வெள்ளத்தின் மீது கொண்டுபோவதுதான்.

ரயில் தண்டவாளச் சாலைகள் இவ்விதம் போவதை நான் அதிகமாய்ப் பார்த்திருக்கிறேன். ஆனுல் என் ஞாபகத்தில், இந்தியாவில் இத்தகைய ஜலப் பிரவாகத்துக்கு இது ஒன்றுதான் உதாரணமாகும். கலைப் பண்பின் வெள்ளத்தைக் கவனத்தில் வைத்து நாம் யோசனை செய்வோமாயின், இந்தியா முழுதும் இங்ஙனமே நிரம்பியுள்ளது. ஒவ்வொரு ஜாதியின் கலைப் பண்பும், தனிப்பட்டும், ஒன்ருேடொன்று பல முறைகள் கலந்தபோதிலுங்கூட, ஒன்றையொன்று தீண்டாமலுமே இருந்து வருகின்றது.

## 6. ஸ்வர்ண பூமியின் தாய்

'இராவதி' என்று சொல்லலாமா, அல்லது 'ஐராவதி' என்பதா? எனக்குத் தெரிந்த வரையில், 'இரா' என்னும் புல்லிலிருந்து இந்த நதியின் பெயர் 'ஐராவதி' ஆகியிருக்கவேண்டும். இதன் கரையி லுள்ள புஷ்டி தரும் புற்களை மேய்ந்து கொழுத்த யானைகளை ஐராவதமென்று கூறியிருப்பார்கள்; அல் லது, இந்திரனுடைய ஐராவதத்தைப் போல் வாட்ட மும் சாட்டமுமாய் வளர்ந்த, மதயானை போல் நடக் கும் இந்த நதியைக் கண்டு, எந்த பௌத்த பிக்ஷு வுக்காவது, 'இதை ஐராவதி என்று கூறுவதே சரி' என்று தோன்றியிருக்கும்.

சரித்திரத்தின் கற்பனை அலைகளிலே விளையாடு வது ஒரே இடத்தில் உட்கார்ந்து வீண் பொழுது போக்குவோரின் வேலை; பிரயாணிக்கு இந்த வேலை பிடிக்காது.

ஐராவதி இந்தியாவில் இருந்திருக்குமாயின், சம்ஸ்கிருதக் கவிகள் அதனுடைய வருணனையில் அதைப் போலவே விஸ்தீர்ணமுள்ள காவிய வெள் ளத்தைப் பெருகவிட்டிருப்பார்கள். பிரம்ம (பர்மா) தேசத்துக் கவிகளும், அநேக காவியங்கள் எழுதியிருக் கலாம்; ஆனால் அது நமக்கு எப்படித் தெரியும்? பர்மிய பாஷை நம் தாய்மொழியல்ல, சாஸ்திர பாஷையல்ல, ராஜபாஷையுமல்ல. நமது அண்டை வீட்டுக்காரனின் பாஷையைக் கற்றுக்கொள்ள வேண்டுமென்ற இயல்பு நம்மிடம் இல்லை. எவ

ருவது ஓர் ஆங்கிலேயன் பர்மிய பாஷையைக் கற்று, பர்மியக் கவிதைகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து நமக்குத் தந்தானுயின், ஒருவேளை அது நமக்குப் படிக்கக் கிடைக்கலாம்.

எந்தத் தேசமும், ஐராவதியைப் போன்ற நதியைப்பற்றிப் பெருமைகொண்டு, அதற்கு நன்றி செலுத்தக்கூடும். நாங்கள் பர்மாவில் ரங்கூனுக்கு வடக்கே மாண்டலே வரையில் புகைவண்டியில் பிர யாணம் செய்தோம். அங்கிருந்து வெகு சமீபத்தில் அமராபுரா சென்று, முதல் தடவையாக நாங்கள் ஐரா வதியைத் தரிசித்தோம். அமராபுராவுக்கு அருகிலேயே புத்தபிரானின் பெரிய பெரிய விக்கிரகங்கள் இருக் கின்றன என்று முன்னமேயே எங்களுக்குத் தெரிந் திருப்பின், நாங்கள் அவரைத் தரிசித்த பின்பே எங் கள் ஐராவதி-யாத்திரையைத் தொடங்கியிருப்போம்.

இவ்விடத்திலும் நதியின் பரப்பு அகலமாய் இருக் கிறது. அக்கம்பக்கத்திலுள்ள பூமி சம தரையா யிருப்பதால் நதியும் கம்பீரமாகக் காண்கிறது. அதன் ஓட்டம் தலைமையும் எடுப்புமுடைய யானையின் நடையைப் போலிருக்கின்றது. இவ்வாருன நதியில், படகிலாவது, நீராவிப் படகிலாவது அமர்ந்து யாத் திரை செய்தல், வாழ்க்கையில் ஓர் அதிருஷ்ட சம்பவமாகும்.

அமராபுராவிலிருந்து மாண்டலேக்குத் திரும்பி வந்து, நாங்கள் நீராவிப் படகில் ஏறினோம். கடல் யாத்திரை வேறு; நதி யாத்திரை வேறு! நதியில் பெரிய பெரிய அலைகள் கிளம்புவதில்லை. இருபக்கத் துக் கரைகளும் நம்மோடு கூடவே வருகின்றன. 'வாழ்க்கை' என்று பெயர்கொண்ட, ஆனல் உயிரை

வாங்கும் மகா பூதத்தின் வலையில் நாம் சிக்கிக் கொண்டிருக்கிறோம் என்ற எண்ணம், நமக்கு நதி யாத்திரையில் உண்டாவதில்லை. சூனியமான, முடிவற்ற ஆகாயத்தில் பூமிகோளம் தனது சநாதனமான யாத்திரையை அமைதியுடன் நிகழ்த்துவது போலவே, நதியின் வெள்ளத்தில் இந்தப் படகுகள் மௌனமாகச் சென்று, அமைதியின் அபூர்வமான இன்பத்தை நமக்குப் பயக்கின்றன. இன்றும், ஐராவதி-யாத்திரையை நினைக்கும்போது, சாணேந்த கர்நாலியின் அருகில் திரௌபதியைப் போன்ற நர்மதையின் யாத்திரையும், சீதையைப் போன்ற தப்தியின் யாத்திரையும், சமுத்திரத்தோடு கலக்கும் வரையில் காசீ-தல-வாஹினியான பாரதமாதா கங்கையின் யாத்திரையும், மதுரை-விருந்தாவனத்தின் கிருஷ்ண சகியான யமுனையின் யாத்திரையும், காச்மீரத்தின் நந்தவனத்தில் பார்வதி போன்ற விதஸ்தையின் (ஜேலம்) யாத்திரையும், வனலக்ஷ்மியின் காதலன் போன்ற கோமாந்தகப் பிரதேசத்தின் ஜலயாத்திரையும் — எல்லாம் ஒருங்கே என் நினைவுக்கு வருகின்றன. இவை எல்லாவற்றிலும், விதஸ்தை-ஐராவதிகளின் யாத்திரைகள்தான் எனக்கு மிகுந்த திருப்தியளித்த நீண்ட யாத்திரைகள். ஸிந்து, கங்கை, பிரம்மபுத்திரா, நர்மதை — இவைகளோடு பொருத்தமுள்ள நதி இதுதான். ஐராவதியின் பரப்பையும், ஓட்டத்தையும் காணும்போது, 'ஒரு விசாலமான சாம்ராஜ்யத்தின் மீது அரசு செலுத்தும் மகாராணியோ இவள்!' என்ற எண்ணம் உதிக்கிறது. ஆராகான் மலையும், பெகுயோமா மலையும் இதைக் காக்கின்றன என்பது உண்மையே; ஆயினும் ஐராவதிக்கு மரியாதை செய்

யும் நோக்கத்துடன், அவைகள் மிகவும் வணக்க மாகத் தூரத்திலேயே நிற்கின்றன.

எங்கள் படகு புறப்பட்டுவிட்டது. சாயங் காலமானவுடனே, கன்றுகள் பசுவினிடம் ஓடிச் செல் வது போல, அக்கம்பக்கத்திலுள்ள பரந்த வெளி களில் வசிக்கும் பாட்டாளிகளாகிய குடியானவர்கள் ஐராவதியின் கரையில் வந்து கூடுகிறார்கள். எங்கள் படகை ஒரு நடமாடும் கடைத்தெரு என்றே சொல்ல லாம். ஏதாவது ஒரு துறைமுகம்—அது பெரிதாயி னும் சரி, சிறிதாயினும் சரி,—வந்துவிட்டால், படகு சங்கு ஊதி ஜனங்களை விருந்துக்கு அழைக்கும். ஜனங் கள் எறும்புக் கூட்டம் போல் ஓடி வருவார்கள். பட கில், பலவிதத் தின்பண்டங்கள், பிரம்பாற் செய்த கூடைகள், சிற்ப வஸ்துக்கள் முதலிய பலவகைப் பொருள்களின் கடைகள் கூடிவிடும். படகின் உட் புறத்திலும் யாத்திரை செய்யும் வியாபாரிகள் தத்தம் பண்டங்களுடன் உட்கார்ந்திருப்பார்கள். பறவை களின் கலகலப்புச் சத்தத்தைப் போல், பண்ட மாற்றம் மும்முரமாயிருக்கும். அவர்களின் பாஷையை அறிந்தவர்களுக்கல்லவா, ஜனங்களின் இந்த இரைச் சலால் வெறுப்புத் தட்டும்? எங்களுக்கு என்ன? ஜனங்களின் சண்டை சச்சரவுகள்,பேரிரைச்சல்கள்— எல்லாம் எங்களுக்கு சகஜம்தான். ஒரு பெரிய நாடகம் ஆடப்படுவது போலத் தோன்றியது எங்க ளுக்கு. பண்டமாற்றம் முடிந்தவுடன் படகு புறப் படும். அப்போதுதான் கன்று போட்டிருக்கும் எருமையைப் போல், எங்கள் படகு அசைந்து கொண்டே செல்லும். கப்பலிலிருந்த ஒரு நீச வெள்ளையனுன அதிகாரியுடன் ஒரு சிறு தகராறு ஏற்

பட்டபடியால், அன்றைய தினம் எங்கள் ஆனந்தம் சிறிது சிதறியிருந்தது. ஆனால் மெல்ல மெல்ல வீசிய காற்றினால் அந்த விரஸம் போய்விட்டது. நாங்கள் எப்போதும் போலவே பழைய ஆனந்தத்தை அடைந்தோம்.

மறுபடியும் ஒரு துறைமுகம் வந்தது. இவ்விடத்தில் வியாபாரம் அதிகம் போல் காணப்பட்டது. சிறியவையும்,பெரியவையுமான கணக்கற்ற படகுகள் நதிக்கரையில் சேற்றில் புரண்டு கிடந்தன. எருமை மாடுகளின் முதுகில் ஈக்கள் 'ஙொய்' யென்று சத்தமிடுவது போல, கிராமப் பிள்ளைகள் இந்தப் படகுகளில் குதித்து விளையாடிக்கொண்டிருந்தனர். பர்மியர்களுக்குப் பச்சை குத்திக்கொள்ளுவதில் மிகுந்த ஆசை. இவர்களின் தாழை போன்ற வெண்மையான தோலில், சிவப்பும் நீலமுமான பச்சைகள் மிக அழகாயிருக்கின்றன. இந்த ஜன்மத்தில் உடலில் ஆபரணங்களைப் பச்சை குத்திக்கொள்ளுவதால் அடுத்த பிறப்பில் பொன் நகைகள் கிடைக்குமென்றும், நெற்றியில் சுட்டியும் சந்திரனும் குத்திக்கொள்ளுவதால் அழியாத பெருஞ் செல்வம் கிடைக்குமென்றும் மகாராஷ்டிர தேசத்திலுள்ள கிராம ஜனங்கள் நம்புகிறார்கள். இங்குள்ள ஜனங்களுக்கும் அதைப்போன்ற ஏதாவது ஒரு நம்பிக்கை இருக்க வேண்டும். அநேகம் பேர் இடுப்பிலிருந்து முழங்கால் வரையில், உடல் முழுவதிலும், நிறநிறமான லுங்கியைப் போல் பச்சை குத்திக்கொண்டிருந்தார்கள். ஆகையினால் அவர்கள் நிர்வாணமாக நதியில் மூழ்க இறங்கியபோதுகூட அம்மணமாயிருப்பதாகத் தோன்றவில்லை. படகு அதிக நேரம் தங்கும் இடங்

களில், நாங்கள் பக்கத்திலுள்ள கிராமங்களுக்குச் சென்று வருவோம். பர்மிய வீடுகளும், கிராமங்களும் எங்கள் கண்களுக்கு அறிமுகமாகிவிட்டன. அவர் களின் பாஷை எங்களுக்குத் தெரியாதிருந்த போதி லும்கூட, அந்த அப்பாவிகளான கிராம ஜனங்களின் வாழ்க்கை எங்களுக்குப் பழகியது போலவே இருந் தது. நாம் அரசியல் - உலகினர், வியாபாரிகள் ஆகிய வர்களின் கோபதாபங்களை நீக்கிவிடுவோமாயின், தார்மிகர்கள் - தார்மிகரல்லாதவர்கள் என்பவர்களின் கற்பனை சிருஷ்டியை ஒரு புறமாக ஒதுக்கி வைத்து விடுவோமாயின், மனித ஜாதி முழுமையும் ஒரே குடும்பம், ஒரே சமூகம் ஆகிவிடும்.

இந்த யாத்திரையில் நடு நடுவே ஸ்தூபங் களும் கோயில்களும் தொடர்ச்சியாகத் தென்பட்டுக் கொண்டே வந்தன. நதியின் பிரவாக - சங்கீதத் துக்கிடையே இவை தாளம் அடிக்கின்றன போலும்! சாதாரணமாக எப்போதுமே, உயர்ந்த குன்றுகளும் மலையுச்சிகளும் மனிதனுக்குப் பிரியமானவை. பின் னும், நீல நதியைப் போல் விசாலமான ஐராவதி, நாலு திசைகளிலும் தனது அருளின் ஆர்ப்பாட்டத் தைச் செலுத்தும்போது, இந்த உயர்ந்த இடங்கள் புகலிடங்க ளாகிவிடுகின்றன. மனிதன் கோயில்களை நிர்மிப்பதல்லாது, வேறு எவ்விதமாக அதற்கு நன்றி செலுத்த இயலும்? ஊசலாடும் பச்சைப் பசே லென்ற இலைகளில், மஞ்சள் நிறமான பழுத்த பழங் கள் தம் முழு மதத்தையும் வெளியிடுகின்றன என் பதை, பிரகிருதி நமக்குக் கற்றுக்கொடுத்தது. இந்தக் கல்வியைப் பயன்படுத்தி, மனிதர்கள் மரங்களின் நடுவே கோயில்களை அமைத்து, அவைகளின்மீது

ஆகாயத்தின் எல்லையற்ற தன்மையைக் காட்டும் பொன் விரல்களை உயர்த்தியிருக்கின்றனர். 'இயற்கை யழகை மனிதன் விருத்திசெய்ய முடியாது' என்று நினைப்பவர்கள், ஒரு தடவை இங்கு வந்து இந்த உயர்ந்த சிகரங்களை அவசியம் பார்க்க வேண்டும்.

மத்தியான வேளை. ஆங்கில மறிந்த ஒரு பர்மி யக் கலாசாலை மாணவனுடன் நாங்கள் சம்பாஷித்துக் கொண்டிருந்தோம். இதற்குள் ஓர் அமைதியான சத்தம் கேட்டது. சிந்த்வீன் நதி தனது கப் பத்துடன் ஐராவதியோடு கலக்க வந்தது. அவ் விரண்டின் அன்பான சந்திப்பின் அழகை என்ன வென்று வர்ணிப்பது? ஸமர்த்த ராமதாஸரும் துகா ராமும் சந்தித்தது போல, அல்லது சொக்கட்டான் விளையாடும் காளிதாசனுக்கு பவபூதி தன் 'உத்தர ராம சரிதத்'தைப் படித்துக் காட்டுவது போல இருந் தது அந்தக் காட்சி!

கற்பனை மூலமாக நான் சிந்த்வீனின் அறிமுக மில்லாத பிரதேசங்களில் சான்-ர்ராஜ்யம் வரையில் கூடப் பிரயாணம் செய்திருக்கிறேன். கையில் வில் லும் அம்பும் ஏந்திய, அல்லது கோடரிகளுடன் திரி யும் கவலையில்லாத, பயமில்லாத காட்டுமிராண்டி ஜனங்களை அங்கே நான் சந்தித்தேன். சிறிது சந் தேகம் தோன்றினும் நம் உயிரை மாய்க்கும், ஆனால் நம்பிக்கை ஏற்பட்டுவிடின் நமக்காகத் தம் பிராண னையே அர்ப்பணம் செய்யும் இந்தப் பிரகிருதிக் குழந்தைகளின் காட்சி, நாகரிகத்தின் சேற்றைக் கழு வும் மங்களஸ்நானம் போல் தோன்றியது எனக்கு. 'எங்கும் போய்க் கரை காணாது எறிகடல் வாய் மீண் டேயும் வங்கத்தின் கூம்பேறும் மாப் பறவை'யைப்

போல், என் கற்பனையும் காடுகளைச் சுற்றிவிட்டு மீண்டும் படகுக்கே வந்து சேர்ந்தது. நாங்கள் பகோகு துறைமுகம் வந்து சேர்ந்துவிட்டோம். பகோகுவின் அருகில் சேறு நிரம்பிய நதியில் மூழ்கி விட்டு, ஒரு பர்மிய கனவானின் விருந்தை உண்ட பின்பு, நாங்கள் மறுபடியும் படகேறி, மண்ணெண் ணெய்க் கிணறுகளைக் காண, யெனன்ஜாம் வரை யில் சென்றோம். இங்கே அமெரிக்கத் தொழிலாளி களின் அரசாங்கம் நடைபெறுகிறதென்று சொல்ல லாம். அக்கம் பக்கத்தில் வனத்தின் சோபையே இல்லை. ஒரு புறம் மண்ணெண்ணெய்க் கிணறு களின் இந்தப் புது இடங்களையும், மற்றொரு புறம் குன்றின்மேலுள்ள தொன்மையான சிறு பௌத்தக் கோயிலின் தீர்த்த க்ஷேத்திரத்தையும் கண்டு மனத் தில் பல எண்ணங்கள் பிறந்தன. கோயிலின் சிற்பத் தில், யானை முகமுள்ள ஒரு பறவை மரக் கம்பத்தில் செதுக்கப்பட்டிருந்தது. இம்மாதிரியே கலப்புள்ள பல பொருள்கள் காணப்பட்டன. அருகிலேயே யுள்ள மடத்தில் சில பௌத்த சாதுக்கள் இனிய குர லுடன் மாலைப் பிரார்த்தனை நிகழ்த்திக்கொண்டிருந்த னர். எவ்விதப் பட்சபாதமுமின்றி ஐராவதி, இவ் வண்ணம் மண்ணெண்ணெய்க் கிணறுகளின் பம்பு களின் கோலாகலத்தைப் பொறுத்துக்கொண்டிருப்ப துடன், 'அநிச்சா பத ஸங்காரா உப்பாதவ்யய- தம்மினோ'வின் அமைதியான பழைய உபதேசத் தையும் தன்னிடம் வைத்துக்கொண்டிருக்கிறது. அமெரிக்காவின் பலத்துக்கு வேறோர் இணையில்லாம லிருக்கலாம். ஆயினும், அந்தப் பூகண்டம் ஒரு சிறு குழந்தைதானே! அதற்கு வாழ்க்கையின் ரகசியம்

விரைவில் எப்படிக் கைகூடும்? நதிக்கரையில் மூவா யிரம் அடிகள் ஆழமான கிணறுகள் தோண்டி, மண் ணெண்ணெய் எடுக்கும் வித்தைதான் அதற்குத் தெரி யும். 'உலகத்துப் பொருள்களெல்லாம் உண்டாகின் றன, அழிந்து போகின்றன. எல்லாம் அழிபவை, வீணனவை; சாரமற்றவை; இவைகளிலிருந்து தப்பி நிர்வாண மடைவதில்தான் சாரமிருக்கிறது'—என்ற தத்துவார்த்தத்தை எந்த அமெரிக்கன் ஒப்புக் கொள்ளுவான்? ஆனல் ஐராவதியோ, தன் ஊக்கத் தின் காரணமாக ஞானத்தை எப்போதும் மறுக்காது; ஞானத்தின் பளுவினுல் தன் ஊக்கத்தையும் இழக் காது. மகா சமுத்திரத்தில் கலப்பதும், அக் கலப்பின் ஆனந்தத்தை எப்போதும் அகண்டமாக வைத்துக் கொள்வதுமே அதன் வேலே.

யெனன்ஜாமிலிருந்து நாங்கள் ப்ரோம் வரையில் சென்று, அங்கு ஐராவதியினிடமிருந்து விடைபெற் றுக்கொண்டோம். இங்கிருந்து மேலே சென்றவுடன் இந்த மகாநதி பல தாரைகளாகப் பிரிந்து கடலில் கலக்கிறது. உண்மையில், ஐராவதி பொன்னுட்டின் அன்னேதான்!



கோதாவரி



ஸிந்து நதி

# 7. தென்னுட்டின் கங்கை

[1]

நாங்கள் சிறுவர்களாக இருந்தபோது காலையில் எழுந்திருந்து மராட்டியில் காலைப் பாட்டுக்கள் பாடுவது வழக்கம். அதில் நான்கு வரிகள் இப்போதும் என் நினைவில் இருக்கின்றன :

எழுந்திருங்கள் காலையில் ;
வாயால் வாழ்த்துங்கள் சந்திர மௌளியை,
ஸ்ரீ பிந்து மாதவனின் அருகே ;
ஸ்நானம் செய்யுங்கள் கங்கையில் ;
ஸ்நானம் செய்யுங்கள் கோதையில்.

* * * *

கிருஷ்ணு வேண்யா துங்கபத்ரா,
ஸரயூ யமுனு நர்மதா ;
பீமா பாமா முக்கிய கோதை,
ஸ்நானம் செய்யுங்கள் கங்கையில்.

கங்கையும் கோதாவரியும் ஒன்றுதான் ; இரண்டின் மாகாத்மியத்திலும் சிறிதுகூட வித்தியாசம் இல்லை. அப்படி ஏதாவது இருக்குமானுல் இது ஒன்றுதான் இருக்கக்கூடும்: கலிகாலத்துப் பாவங்களின் காரணமாகக் கங்கையின் பெருமை எவ்விதத்திலாவது சற்றுக் குறைந்து போனுலும் போகலாம், ஆனுல் கோதாவரியின் பெருமை எக்காலத்தும் குறையக்கூடியதல்ல. இராமபிரானின் மிகுந்த இன்பம் நிரம்பிய நாட்கள் இதே கோதாவரியின் கரையில் கழிந்தன ; வாழ்க்கையின் கொடிய தாக்குதல்களையும்

அவர் இங்கேதான் சகிக்க நேர்ந்தது. கோதாவரி உண்மையில் தென்னுட்டின் கங்கை.

கிருஷ்ணுவும் கோதாவரியுமாகிய இரு நதிகளும் இரண்டு பெரிய பிரஜைகளைப் பரிபாலித்துப் போஷித்திருக்கின்றன. மகாராஷ்டிரத்தின் ஸ்வராஜ்யமும், ஆந்திரத்தின் ஸ்வராஜ்யமும் இவ்விரண்டு நதிகளுக்கே என்றும் கடன்பட்டுள்ளன என்று சொன்னுல் சிறிதும் மிகையாகாது. சாம்ராஜ்யங்கள் எழுப்பப்படட்டும், அழியட்டும்; பெரிய பெரிய ராஷ்டிரங்கள் ஏறட்டும், விழட்டும்; ஆனுல் இந்தச் சரித்திர பூமியிலுள்ள இவ்விரு நதிகளும் அகண்ட ரூபமாகப் பெருகி ஓடிக் கொண்டே இருக்கின்றன. இந்த நதிகள் இறந்த காலத்திய, பெருமை வாய்ந்த சரித்திரத்துக்கு எங்ஙனம் சாட்சிகளாக இருக்கின்றனவோ, அங்ஙனமே எதிர்காலத்திய பெரும் பெரும் லட்சியங்களுக்கும் தூண்டுகோல்களாக இருக்கின்றன. அதிலும் கோதாவரியின் பெருமையோ ஓர் அற்புதம் வாய்ந்ததுதான். அது எவ்வளவு நீர்வளமுள்ளதோ அவ்வளவே சரித்திரவளமும் பொருந்தியது. எவ்வண்ணம் ஸ்ரீகிருஷ்ணனின் வாழ்க்கையில் எங்கும் விதவிதமான பல தன்மைகள் தோன்றியும் ஒரே மாதிரியான மேன்மை நிரம்பியிருக்கிறதோ, அவ்வண்ணமே கோதாவரியின் மிகவும் நீண்ட வெள்ளத்தின் கரைமீதும், சிருஷ்டி சௌந்தர்யம் தன் விதவிதமான . தன்மைகளோடு கூடவே, விசாலத்தன்மையையும் கொண்டு, நாற்புறமும் சிதறிக் கிடக்கின்றது. சிருஷ்டிகர்த்தனுன பிரமனின் கற்பனையிலிருந்து எங்ஙனம் சிருஷ்டி பரவுகின்றதோ, வால்மீகியின் கருணை நிரம்பிய வேதனையிலிருந்து எங்ஙனம் இராமாயணத்தின் சிருஷ்டி

விஸ்தார மடைந்ததோ, அங்ஙனமே திரியம்பக மலை யின் உயர் கரையிலிருந்து சொட்டும் கோதாவரியி லிருந்தே மேலே சென்று ராஜமஹேந்திரியின் விசால மான ஜலராசி உண்டாகியிருக்கிறது. எவ்விதம் ஸிந்துவுக்கும் பிரம்மபுத்திராவுக்கும் இமயமலையை ஆலிங்கனம் செய்யத் தோன்றியதோ, எவ்விதம் நர்ம தைக்கும் தப்திக்கும் விந்திய ஸாத்பூடா மலைகளைக் கரைக்கவேண்டுமென்ற எண்ணம் உதித்ததோ, அவ் விதமே கோதாவரிக்கும் கிருஷ்ணுவுக்கும் தென் திசையிலுள்ள உயர்ந்த பிரதேசத்தை ஈரமாக்கி, அதைத் தனதானியங்களால் நிரப்பிவிட வேண்டு மென்று தோன்றியது. இவ்விரு நதிகளுக்கும் ஸஹ் யாத்திரியின் மேற்குப் புறமாக நழுவி யோடுவது கொஞ்சம் பட்சபாதம் நிறைந்ததாகத் தோன்றி யிருக்க வேண்டும்; அதனுல்தான் இவை அதைக் கிழக்குமுகமாக இழுக்க இடைவிடாது முயலுகின் றன போலத் தோற்றுகிறது.

இவ்விரு நதிகளின் உற்பத்தி ஸ்தானங்களும் மேற்குக் கடலிலிருந்து 50-75 மைல்கள் தூரத்துக்கு மேல் இல்லை; ஆயினும் இவை இரண்டும் 800-900 மைல்கள் தூரம் நீண்ட யாத்திரை செய்து, தமது நீர்ச் சுமையை அல்லது வரிச் சுமையைக் கிழக்குக் கடலுக்குத்தான் அர்ப்பணஞ் செய்கின்றன. இந்த வரியும் சாதாரணமானதல்ல; அதனுள் மகாராஷ் டிர தேசம் முழுவதும் வந்துவிடுகிறது; ஹைதரா பாத் மைசூர் ராஜ்யங்களும் அதிலேயே அடங்கிவிடு கின்றன; மேலும் முழுக்க முழுக்க ஆந்திர நாடுங் கூட. கோதாவரிக்கு முன்பு எகிப்து தேசத்தின் கலைப் பண்பின் அன்னையான நீலநதி எம்மாத்திரம்!

திரியம்பகத்துக்கு எதிரே மலையின் ஒரு பெரிய சுவரிலிருந்து கோதாவரி புறப்படுகிறுள். திரியம்பகக் கிராமத்திலிருந்து ஏறும் வழி, கோதாவரி அன்னையின் மூர்த்தியின் திருவடிகள் வரையிலும் சென்றுவிடு கிறது. அங்கிருந்து மேலே போக இடதுபுறமாகக் கோணல்மாணலான படிகள் அமைக்கப்பட்டிருக் கின்றன. இவ்விதம் ஒரு மனிதன் பிரம்மகிரி வரை யிலும் போய்ச் சேர்ந்துவிட முடியும். ஆனல் அந்த உலகமே வேருனதுதான். கோதாவரியின் உற்பத்தி ஸ்தானத்திலிருந்து காணப்படும் காட்சி நமது சுற்று வட்டத்துக்கு மிகவும் பொருத்தமாக இருக்கிறது. மகாராஷ்டிரத்துத் தவசிகளும் அரசர்களும் சரி சமானமாக இவ்விடத்தில் தமது பக்தி பாவனையின் அஞ்சலியைச் சமர்ப்பித்திருக்கின்றனர். கிருஷ்ணு வின் கரையிலுள்ள வாயியும் ஸதாராவும், கோதா வரிக் கரையிலுள்ள நாஸிக்கும் பைடணும் மகாராஷ் டிரத்தின் உண்மையான இராஜதானிகள்.

ஆனல் கோதாவரியின் உண்மையான சரித்தி ரமோ, மிகப் பொறுமையுள்ளவரான இராமபிரா னுடையவும், துன்பமே உருவாகிய சீதைப்பிராட்டியி னுடையவும் விருத்தாந்தத்திலிருந்தே ஆரம்பிக்கிறது. இராஜ்யத்தை விட்டுவந்த சமயத்தில், இராமனுக்குத் துன்பம் உண்டாகவில்லை; ஆனல் கோதாவரிக் கரை யில் சீதையோடும் இலக்குமணனேடும் அனுபவித்த ஆனந்தங்களுக்கு முடிவு ஏற்பட்டபோது, இராமனின் இதயம் ஒரேயடியாக விண்டு பல்லாயிரம் சுக்கல்க ளாகிவிட்டது. ஓநாய்களும் புலிகளும் இல்லாமையால் அச்ச மொழிந்திருந்த அந்த மான்களுங்கூட, இராம பிரானின் துன்பங் கலங்கிய கண்களைக் கண்டு, வெகு

தூரம் ஓடிப்போயிருக்கும்; சீதையைத் தேடுவதற்கா கச் சென்ற மைத்துனன் இலக்குமணனின் கர்ச்சனை யைச் செவியுற்று, பெரிய பெரிய யானைகளும் அஞ்சி நடுநடுங்கிப் போயிருக்கும். கோதாவரியின் முத்துப் போன்ற நீர் மிருக பட்சிகளின் துன்பக் கண்ணீர் களால் காஷாயமாகப் போயிருக்கும். இமயமலையில் பார்வதி போலவே, ஜனஸ்தானத்தில் சீதை அகில உல குக்கும் தலைவியாக விளங்கினுள். அவள் போய்விட்ட பின், பிரளய காலத்தது போன்ற பூமண்டல முழுமை யின் துன்பம் அங்கே பரவிய தென்ருல் இதில் ஆச்ச ரிய மென்ன?

இராமனும் சீதையும் என்னவோ மீண்டும் சந்தித் தனர்; ஆனுல் ஜனஸ்தானத்துப் பிரிவோ எப்போ தைக்கும் ஸ்திரமாகிவிட்டது. இன்றுகூட நாஸிக் - பஞ்சவடியில் சுற்றித் திரிந்து பார்த்தால், நீங்கள் அங்கே மழைகாலத்து நான்கு மாதங்களில் சென்ரு லும் சரி, கோடை காலத்தில் சென்ருலும் சரி, பஞ்ச வடி முழுதும் ஜடாயுவைப் போல் சோகத்தினுல் துன் புற்று, 'ஐயோ சீதையே! ஐயோ சீதையே!' என்று கூவிக்கொண்டிருப்பது போலத் தோன்றும். மகா ராஷ்டிரத்துப் பெரியார்களும் பக்தர்களும் தமது மங்களமயமான மொழிகளை இங்கே பரப்பாமலிருந் திருந்தால், ஜனஸ்தானம் ஒரு பயங்கரமான பாழிட மாகியிருக்கும். வெயிலின் கொடுமையைத் தணிப்ப தற்குப் பச்சைப் பசேலென்ற சிருஷ்டி நாற்புறமும் பரவிவிடுவது போலவே, வாழ்க்கையின் கொடு மையை மறக்கச்செய்வதற்காகப் பெரியார்களும் பக்தர்களும் எங்கும் சஞ்சரித்துவருவது எத்தகைய பாக்கியமாகும்! நான் நாஸிகையையும் திரியம்ப

கத்தையும் நோக்கிப் போகும்போ தெல்லாம், வன வாசத்துக்காக இதே இடத்தை விரும்பிய இராம-லக்ஷ் மணர்களின் கண்களைக் கொண்டு எல்லாப் பிரதேசத் தையும் பார்க்கவேண்டுமென்று என் மனம் ஆர்வங் கொள்ளும்; ஆனால் ஒவ்வொரு தடவையும் அசையும் புற்களில்கூடச் சீதை யன்னையின் துன்பமுற்ற திரு மேனியே காணப்படும். இராமபக்தரான ஸமர்த்த ராமதாஸர் இங்கு வசித்துவந்தபோது, அவருடைய இதயத்தில் எத்தனை எழுச்சிகள் பொங்கியிருக்கும்! ஸ்ரீ ஸமர்த்தர் கோதாவரிக் கரையில் சாணத்தினால் செய்த ஹனுமானை ஸ்தாபித்ததன் கருத்துத்தான் என்ன? பஞ்சவடியில் ஹனுமான் இருந்திருந்தால், அவர் சீதை யன்னையை அபகரிக்க விட்டிருக்கமாட் டார் என்பதுதானே அதன் கருத்து? சீதை இலக்கு வனைத் தன் கொடுமொழிகளால் புண்படுத்தித் தனக்கு ஒரு பேராபத்தை வரவழைத்துக் கொண் டாள். ஹனுமானிடம் அவள் அத்தகைய தைக்கும் சொற்களைக் கூறியிருக்க முடியாது. ஆனால், ஜன ஸ்தானத்துக்கும் கிஷ்கிந்தைக்கும் இடையே பெரிய வித்தியாசமுள்ளது; மேலும், கோதாவரி துங்கபத் திரையாகுமா என்ன?

[2]

இராமகதையின் கருணரஸம் திரேதாயுகத்தி லிருந்து இன்று வரையில் பெருகி ஓடிக்கொண்டே வருகிறது. அதைக் குறைக்க யாரால் முடியும்? ஆதலின் வாருங்கள், ஹரிஜனங்களின் எருமை மாட் டின் வாயிலிருந்து வேத மந்திரங்களை அத்தியயனம் செய்விக்கும் ஸ்ரீ ஞானேச்வரப் பெரியாரை நாம்

தரிசிக்கப் பைடணை நோக்கிச் செல்வோம். எவ்விதம் கோதாவரி தென்னுட்டின் கங்கையோ அவ்விதமே அதன் கரையில் ஸ்தாபிக்கப்பட்ட பிரதிஷ்டான நகரம் தென்னுட்டின் காசி என்று கருதப்படுகிறது. நான்கு வேதங்களிலும் ஆறு வேதாங்கங்களிலும் வல்லவர்களான இங்கிருந்த அந்தணர்கள் செய்யும் ஏற்பாட்டை நான்கு வருணத்தாரும் ஒப்புக்கொள்ள வேண்டியதாக இருந்தது. பெரிய பெரிய சக்கர வர்த்திகளின் தாமிர சாஸனங்களைக் காட்டிலும் அதிகமான மதிப்பு இங்கிருந்த அந்தணர்களின் தீர்மானப் பத்திரங்களுக்கு அளிக்கப்பட்டு வந்தது. இப்படிப்பட்ட ஓரிடத்திலுங்கூட, சாஸ்திர தர்மத் தைத் தோற்கடித்து, இதய தர்மத்தை வெல்லச் செய்த சாமர்த்தியம் ஞானேச்வரப் பெரியாருக்கே உரியது. சந்நியாசியான சங்கராசாரியார் மீது இழைக் கப்பட்ட அநீதியின் ஞாபகத்தை நிலைக்கச் செய்வதற் காக அந்நாட்டு அரசன் நம்பூதிரிப் பிராமணர்கள் மீது சில கொடிய விதிகளைச் சுமத்திவிட்டது போலவே, எவனுவது ஓர் அரசன் சந்நியாசியின் புதல் வராகிய ஞானேச்வரருக்குச் சிஷ்யனுக இருந்திருப் பின், அவனும் மஹாராஷ்டிரத்துப் பிராமணர்களுக் குக் கொடிய தண்டனை விதித்து, 'இனி வருங்காலத் தில் உங்களுக்கெல்லாம் பூணூல் தரிக்க ஓர் அதி காரமும் இல்லை' என்று கூறியிருப்பான்.

கைகளின் விரல்களினுல் விசிறி உண்டாகிவிடு வது போலவே, பெரிய பெரிய நதிகளில் வந்து கலந்து தம்மைத் தாம் அழித்துவிடும் வேலையாகிய கடின யோகத்தைச் சாதிக்கும் சிறிய நதிகளும் விசிறி போல் ஆகிவிடுகின்றன. ஸஹ்யாத்ரி அஞ்சனு மலைகளின்

உயர் கரைகளில் பெய்யும் மழையை யெல்லாம் இழுத்து இழுத்து மைதானத்தில் பரவச் செய்யும் வேலையை இந்த நதிகள் செய்கின்றன. தாரணுவை யும் காதவாவையும், பிரவராவையும் முலாவையும் விட்டுவிட்டாலுங்கூட, மத்திய இந்தியாவிலிருந்து வெகு தூரத்திலுள்ள நீரைக் கொண்டுவரும் வர்தா வையும் பைன்கங்காவையும் எவ்விதம் மறக்கலாகும்? இரண்டு சேர்ந்து ஒன்ருன இவ்விடத்து ஒரு நதிக்குப் 'பிராணஹிதா' என்று பெயர் சூட்டினவனுடைய மனத்தில்,எவ்வளவு நன்றி யறிவும், எவ்வளவு காவியச் சுவையும், எவ்வளவு ஆனந்தமும் நிரம்பி யிருந்திருக் கும்! நேர் ஈசானத் திசையின் கோடியிலிருந்து கிழக் குத் தொடர்ச்சி மலையின் நீரைக் கொண்டுவரும் அஷ்டாவக்கிராவும், இந்திராவதியும், அவள் தோழி யான சிரமணியும், தவ மகளான சபரியை வணங் காமல் எங்ஙனம் முன்னேறுவார்கள்?

கோதாவரியின் கலை முழுவதையும் பத்திராசலத் திலிருந்தே காணலாம். ஒன்றிலிருந்து இரண்டு மைல் தூரம் வரையில் அகலமான மணல் வெளியையுடைய கோதாவரி, மிகவும் உயரமான மலைகளினூடே சென்று, தன் வழியைச் சரிப்படுத்திக்கொண்டு, கேவ லம் இருநூறு கஜமுள்ள கழியாக வெளிவரும்போது அவள் என்ன நினைப்பாள்? தன் முழு பலத்தையும் உபாயத்தையும் செலவு செய்து, மிகவும் நுட்பமான சந்தர்ப்பத்திலிருந்து வெளிவந்து, தேசத்தை முன்னே நடத்திச்செல்லும் ஒரு தேசீய மகா புருஷனைப்போல், உலகத்தைத் திகைக்கச் செய்யும் கர்ஜனையுடன், அவள் இங்கிருந்து புறப்படுகிருள். குதிரையத்தனை உயரமான வெள்ளத்தைப் பற்றியும், யானையத்தனை

உயரமான வெள்ளத்தைப் பற்றியும் நாம் கேள்விப் பட்டிருக்கிறோம்; ஆனால் ஒரே யடியாக ஐம்ப தடி உயரமுள்ள வெள்ளத்தை எப்போதாயினும் கற்பனை செய்தாவது பார்த்ததுண்டா? ஆனால் கற்பனையிலும் அசாத்தியமான விஷயம் கோதாவரியின் வெள்ளத்தில் சாத்தியமாகிறது. நெருங்கிய வழியாகப் புறப்படும் நீருக்குத் தன் மேற்பரப்பை ஒரே சமதலமாக வைத்துக்கொள்வது கடினம். அர்க்கியம் கொடுக்கும்போது அங்கையில் சிறிய முகமுள்ள வாய்க்கால் உண்டாகிவிடுவது போலவே, கழியிலிருந்து புறப்படும் நீரின் மேற்பரப்பும் ஒரு பயங்கர வாய்க்கா லாகிவிடுகிறது; ஆனால் அற்புத ரசத்தின் விந்தையெல்லாம் இனிமேல்தான் இருக்கிறது. இந்த வாய்க்காலின் மூலம் தமது படகுகளைக் கொண்டு போகும் தைரியம் வாய்ந்த படகுக்காரர்களும் அங்கே இருக்கிறார்கள். படகின் இரு புறமும் தண்ணீரின் உயர்ந்த அலைச் சுவர்கள் படகின் வேகத்தோடு கூடவே வருவதைக் கண்டு மனிதனின் மனத்தில் என்ன தோன்றும்?

பத்திராசலத்திலிருந்து ராஜமகேந்திரி அல்லது தவளேசுவரம் வரையில் அகண்ட கோதாவரி ஓடுகிறது. அதற்குப் பின்பு 'தியாகத்துக்காகவே பணத்தைத் திரட்டுபவர்கள்' (त्यागाय संभृतार्थानाम्) என்ற சநாதனமான சித்தாந்தம் அதன் நினைவுக்கு வந்திருக்கவேண்டும். இங்கிருந்துதான் கோதாவரி வாழ்க்கையைத் தானம் செய்யத் தொடங்குகிறது. ஒரு கரையில் கௌதமி கோதாவரி; மறு கரையில் வஸிஷ்ட கோதாவரி; இரண்டுக்கும் இடையே பல தீவுகளும் திடல்களும் இருக்கின்றன. இந்தப் பிர

தேசங்களில் கோதாவரியின் இனிய நீரிலும் பொன் போன்ற மண்ணிலும் விளையும் தானியங்களினுல் வலிவுபெற்று வேதகோஷம் செய்யும் பார்ப்பனர் வசிக்கின்றனர். இத்தகைய வளமுடைய தேசத்தைச் சுதந்திரமாக வைத்துக்கொள்ளும் சக்தியை நம் தேசத்தினர் இழந்துவிட்ட பின்னர், டச்சுக்காரரும், ஆங்கிலேயரும், பிரெஞ்சுக்காரரும் கோதாவரிக் கரையில் கூடாரமடிக்க ஒன்றுகூடினுர்கள். இன்றும் யானும் என்னுமிடத்தில் பிரான்ஸின் மூவர்ணக் கொடி பறக்கிறது.

[3]

சென்னையிலிருந்து ராஜமகேந்திரிக்குப் போகும் போது, பெஜவாடாவைக் கடந்ததும், சூரியோதயமாயிற்று. மாரிகாலம்; ஆகையால் கேட்கவும் வேண்டுமா? சுற்றிலும் பலவித ஒளி வீசும் பசுமை பரந்திருந்தது. பசுமை இவ்விதம் தரையில் படுத்திருப்பதை விரும்பாமலிருந்த பனை மரங்கள், இங்குமங்கும் நின்றனவாய், தம் கைகளில் பெரிய பெரிய பூச்செண்டுகளை வைத்துக்கொண்டு ஆடுவது போலத் தோன்றின. கிழக்குப் பக்கமாக ஒரு கால்வாய் ரயில்சாலையின் ஓரமாகவே ஓடிக்கொண்டிருந்தது. ஆனுல் சாலையின் ஓரம் உயரமாக இருந்ததால் சில சமயங்களில் அதன் நீர் எங்கள் கண்களுக்குத் தென்படாது. வண்ணுத்திப் பூச்சிகளைப் போல் தத்தம் பாய்மரங்களை விரித்து ஒரே வரிசையில் நிற்கும் படகுகளிலிருந்துதான் நாங்கள் கால்வாயை அநுமானிக்க வேண்டியதாயிற்று. இடையிடையே சிறியனவும் பெரியனவுமான குளங்கள் தென்பட்டன. நிறநிற

மான மேகங்களையுடைய ஆகாயம் இவைகளில் மூழ்க இறங்குவது போலத் தோன்றும்; அதனால் நீரின் ஆழம் பின்னும் அகாதமாகிவிடும். சில இடங் களில் சஞ்சலத் தாமரைகளின் நடுவே அசைவற்று நிற்கும் கொக்குகளைக் கண்டு, குளிர்ந்த காலைக் காற்றின் புகழ் பாட மனம் தவிக்கும். இவ்வாறு கவிதை வெள்ளத்தில் மிதந்துகொண்டு போகும் போது கொவ்வூர் ஸ்டேஷன் வந்துவிட்டது. இனி இங்கிருந்தே கோதாவரித் தாயின் தரிசனமும் கிடைக்குமென்ற உல்லாசம் மனத்தில் நிரம்பியிருந் தது. வாராவதியின்மீது போகும்போது வலது புறம் பார்ப்பதா, இடது புறமா என்ற யோசனையிலேயே நான் ஆழ்ந்திருந்தேன். வாராவதி வந்துவிட்டது; தெய்விகக் கோதாவரியின் மிகவும் அகன்ற பரப்பு காணப்பட்டது. கங்கை, ஸிந்து, சோணபத்திரம், ஐராவதி போன்ற மகாநதிகளின் விசாலமான பிரவா கங்களை நான் மன ஆசை தீரப் பார்த்திருக்கிறேன். பெஜவாடாவில் அன்னை கிருஷ்ணையைத் தரிசித்ததற் காக நான் எப்போதும் கர்வங் கொள்வேன். ஆனால் ராஜமகேந்திரியைத் தாண்டியதும் கோதாவரியின் அருமை பெருமையே ஒரு தனி ரகத்தைச் சேர்ந்தது. இவ்விடத்தில் நான் அனுபவித்த அழகிய காவியங் களையோ, அல்லது பிரகிருதியின் படாடோபங்களை யோ வேறு எவ்விடத்திலுமே அனுபவிக்கவில்லை என்று கூறிவிடலாம். மேற்குப் புறத்தில் பார்வை யைச் செலுத்தியபோது வெகு தூரம் வரையில் மலை களின் கூட்டம் காணப்பட்டது. ஆகாயத்தில் மேகங் கள் சூழ்ந்திருந்ததனால் சூரிய வெப்பத்தின் அடை யாளமே எங்கும் இல்லை. முகில்களின் நிறம் கறுத்

திருந்ததனுல் புழுதி புடைத்த கோதாவரி நீரின் பிரதி பிம்பம் பின்னும் ஆழமாகத் தோன்றியது. இம் மாதிரியான தருணத்தில் பவபூதியின் நினைவு ஏன் வராது? மேலே முகிற்கணங்கள்; கீழே கோதாவரி நீர்; இவைகளின் பிரதிபிம்பங்களினுல் இந்தக் காட்சி முழுதும், வேதகாலத்து வைகறையைப்போல் குளிர்ந்ததும் காந்தியுள்ளதுமான அழகு வாய்ந்ததா யிருந்தது. சிறு குன்றுகளின்மீது இறங்கியிருந்த சில வெள்ளிய மேகங்கள் முனிவர்களைப் போலவே தோன்றின. இக்காட்சி முழுவதையும் எவ்வாறு வர்ணிக்க முடியும்? இவ்வளவு நீர் இவ்விடத்தில் எங்கிருந்து வந்துகொண்டிருக்கும்? வெற்றியுடன் விபத்துக்களைத் தாண்டிய ஒரு நாடு, எவ்வாறு வைபவத்தின் புதுப் புது ஒளிகளை வீசி, நாற்புறமும் தன் வளங்களைப் பரப்பிக்கொண்டு போகின்றதோ, அவ்வாறே கோதாவரியின் இந்த அகண்ட வெள்ளம், மலைகளிலிருந்து புறப்பட்டு, தன் கௌரவத்தைக் கூடவே சுமந்துகொண்டு வருவது போலக் காண்கிறது. சிறிய பெரிய படகுகள் நதியின் குழந்தைகள்; அவை அன்னையின் சுபாவத்தோடு பழகியிருப்பதனுல், அவளுடைய மடியில் இஷ்டப்படி கூத்தாடினுலும், விளையாடினுலும், குதித்துத் துழாவினுலும் அவைகளைத் தடுப்பவர் யார்? ஆனுல் குழந்தைகளின் உவமை இந்தப் படகுகளைக் காட்டிலும் பிரவாகத்தில் இங்குமங்கும் தோன்றும் சுழல்களுக்குத்தான் நன்கு பொருந்தும். இந்தச் சுழல்கள் கொஞ்சநேரம் காணப்படும்; சிறிது நேரத்திலேயே பயங்கரப் புயலைப் போல வேஷம் போடும்; பின்பு ஒரே கணத்தில் கலகலவென்று சிரித்துவிடும். இச்சுழல்கள் எங்

கிருந்துதான் வருமோ, எங்குதான் போய்விடுமோ, யார் அறிவார்?

இவ்வளவு அகலமும் நீளமுமான கனத்த மணல் வெளியினிடையில் தீவுகள் இருந்திராவிட்டால் அது ஒரு குறையாகவே இருக்கும். கோதாவரியின் தீவு கள் மிகவும் பிரசித்தமானவை. அவைகளில் பல, பழைய மதங்களைப் போலவே, ஆங்காங்கு நிலையாக அமைந்திருக்கின்றன. இன்னும் பல, கவியின் நவ நவமான சிந்தனையைப் போல், கணந்தோறும் தமது இடங்களைப் புதிதாக மாற்றியும், புதுப் புது உருவங் களை ஏற்றும் வருகின்றன. இத் தீவுகளில் பற்றற்ற கொக்குகளைத் தவிர வேறு யார்தான் வசிக்கப் போ வார்கள்? கொக்குகள் அங்கிருந்து போகும்போது அத் தீவுகளின்மீது தம் கால்களின் ஆழ்ந்த அடை யாளங்களைப் பதித்துவைக்காமல் வேறிடத்திற்குப் போகுமா? தமது மறுவற்ற வெண்ணிறச் சீலத்தைப் பின்பற்றுபவர்களுக்குத் தம் அடிச் சுவடுகளின் மூல மாகத் திசையை அறிவிக்காவிடில் அவை கொக்குக ளாவது எப்படி?

நதியின் கரையை மனிதனது நன்றியறிவின் அகண்டமான உற்சவமென்று சொல்லலாம்! கரைமீ துள்ள வெண்ணிற மாளிகைகளும், கோயில்களும், அவைகளின் உயர்ந்த சிகரங்களுமே ஓர் அகண்ட உபாசனை யாகும். ஆனால் இவ்வளவோடு காவியம் முடிந்துவிடுவதில்லை. ஆகையால் பக்தர்கள் கோயில் களின் மணியோசையின் அலைகளை நதியின் அலை களின் மூலமாக இக்கரையிலிருந்து அக்கரை வரை கொண்டுபோய்ச் சேர்த்தவண்ணமாக இருக்கின்ற னர். கலைப் பண்பின் உபாசகர்களான பாரதவாசிகள்

இவ்விடத்தில்தான் கங்கை நீர் நிரம்பிய குடத்தில் பாதியைக் கோதாவரியில் ஊற்றிவிட்டு மீண்டும் கோதாவரி நீரினால் குடத்தை நிரப்பி எடுத்துக் கொண்டு போகிறார்கள். எத்தனை அழகிய விதிகள்! எத்தனை தூய காவியங்கள்! பக்தியின் இந்த ஒலி, இதயத்தில்தான் நிரம்பியிருக்கிறது! பழங் கால நினைவுதான் கோயில்களின் மணியோசையையும் இந்த இதய ஒலியையும் கேட்கச் செய்தது. நம் காதில் விழுவதோ எஞ்சின்களின் சத்தம்தான்! நாம் இக் காலத்திய கலைப் பண்பின் இந்தப் பிரதிநிதியை வெறுப்பதை விட்டுவிட்டால், ரயில் சக்கரங்களின் தாளமும் நம் மனத்தைக் கவர்வதில் அப்படியொன்றும் குறைந்ததாகத் தோன்றாது; வாராவதியின் மீதோ அதன் வெற்றியொலி வெகுதூரம் வரையில் பரவிக்கொண்டேதான் இருக்கிறது.

வண்டி வாராவதியை முழுதும் கடந்த பின்புதான் கிழக்குப் புறம் பார்ப்பது விட்டுப்போயிற்றென்பது என் நினைவுக்கு வந்தது. நான் அந்தப் பக்கமாகத் திரும்பிப் பார்த்தபோது அங்கே ஓர் அற்புதமான சோபை தென்பட்டது. கோதாவரியின் அகலம் மேற்கில் இருந்ததைக் காட்டிலும் கிழக்கில் எவ்வளவோ மடங்கு அதிகமாக இருந்தது. அது அநேக வழிகளில் சென்று ஆவேசத்துடன் சமுத்திரத்தில் கலக்க வேண்டியிருந்தது. நதி - யரசனை நதி சந்திக்கச் செல்லும்போது அதற்குப் பரபரப்பும் ஆத்திரமும் உண்டாகியே தீரும்; ஆனால் கோதாவரி உயர்வும் எடுப்புமுடைய அன்னையாயிற்றே! அவளுடைய பரபரப்புக்கூட மேன்மையான உருவத்தில்தான் வெளிப்படும். இந்தப் பக்கத்திலிருந்த தீவுகள்

வேருெரு விதமாக இருந்தன. அவைகளில் வனலக்ஷ்மி யின் எழில் முழுதும் நிரம்பியிருந்தது. பிராமணர் களின் அல்லது குடியானவர்களின் குடிசைகள் இப் புறத்திலிருந்து கண்களுக்குத் தென்படவில்லை. ஓடும் தண்ணீரின் எதிர்ப்பைத் தாக்கும் இவ்விரு தீவுகளி லும் யாராவது உயரமான மாளிகைகளை அமைத் திருந்தால் அவை தூரத்திலிருந்தே தென்படும். இயற்கைத் தேவதையோ உயரமான மரங்களாகிய வெற்றிக் கொடிகளை நாட்டியிருந்தாள். இடது பக்கத்தில் ராஜமகேந்திரியிலும் தவளேசுவரத்திலு முள்ள சுகமுள்ள ஜனக்கூட்டம் ஆனந்தம் கொண் டாடிக்கொண்டிருந்தது. கிடைத்தற்கரிய இக் காட்சியைக் கண்டு திருப்தியடைவதற்கு முன்ன மேயே, வலது பக்கத்தில் நதியின் கரையோரமாகவே கர்வத்தோடும் உல்லாசத்தோடும் நாணல்களின் வெண்கொண்டைகள் நிலைபெயராத வெள்ளமாகப் பாய்ந்தோடுவதைக் கண்டேன். நதியின் நீரில் மயக் குந் தன்மை இருந்தது; அதில் அலைகள் இல்லை. கொண்டைகளின் இந்த வெள்ளம் காற்ருேடு கலந்து சதியாலோசனை செய்துகொண்டதன் பய ஞக, மனம் போனவாறு உயரமான அலைகளை வீச அதனுல் முடிந்தது. கண்ணுக்கெட்டிய தூரம் வரையில் நான் பார்த்தேன்; கண்ணுக்கெட்டிய தூரம் இங்கே குறையவேண்டிய காரணம்தான் என்ன? ஆனுல், நாணல் கொண்டைகளின் வெள் ளமோ பெருகிக்கொண்டே போயிற்று. கோதாவரி யின் வெள்ளத்தோடு போட்டியிட்டும்கூட அதற்குக் கூச்சம் உண்டாகவில்லை. அது ஏன் கூச்சங்கொள்ள வேண்டும்? கோதாவரித் தாயின் அகன்ற கரை

மீது அது கொஞ்சமாகவா பால் குடித்திருக்கிறது?

அன்னை கோதாவரியே! இராம-லக்ஷ்மண-சீதையிலிருந்து ஆரம்பித்துக் கிழ ஜடாயு வரையில் எல்லோருக்கும் நீதான் பாலூட்டினாய். உன் கரை மீது சூர வீரர்களும் பெரிய பெரிய தத்துவ ஞானிகளும் பிறந்தனர்; பக்தப் பெரியார்களும் உதித்தனர்; துரந்தரர்களான அரசியல் அறிஞர்களும் தோன்றினர். தேசபக்தர்களும் ஈசுவர பக்தர்களும் பிறந்தனர். நான்கு வருணங்களுக்கும் நீயே தாய். நீயே என் முன்னோர்களின் முக்கிய தேவதை. புதுப் புது ஆசைகளுடன் நான் உன்னைத் தரிசிக்க வந்திருக்கிறேன். உன் தரிசனத்தினாலேயே நான் கிருதார்த்தனாகிவிட்டேன்; ஆனால் என் ஆவல்கள் இன்னும் தீரவில்லை. எவ்விதம் உன் கரைமீது இராமபிரான் துஷ்ட இராவணனை அழிக்கச் சங்கற்பம் செய்திருந்தாரோ, அவ்விதமான சங்கற்பத்தையே நானும் எப்போதிலிருந்தோ செய்துவைத்திருக்கிறேன். உன் கிருபை இருக்குமாயின், என் இதயத்தினின்றும் – அவ்விதமே தேசத்தினின்றும் — இராவணனுடைய இராஜ்யம் அழிந்துபோகும். இராம ராஜ்யத்தின் ஸ்தாபனத்தைக் காண்பேன்; பின்பு உன் தரிசனத்துக்கு வருவேன். வேறொன்றும் இல்லாவிட்டாலும், நாணல் கொண்டைகளின் வெள்ளத்தைப் போல், நீ என்னைப் பித்தனாக்கிவிடு. அதனால் நான் சங்கோசமின்றி ஒரே தியானத்துடன் தாயின் பணிவிடையில் ஈடுபட்டிருக்கவும், மீதி எல்லாவற்றையும் மறந்துவிடவும் இயலும். உன் நீரில் பயன் மிக்க சக்தி இருக்கிறது; உன் தண்ணீரில் ஒரு துளி பருகினாலுங்கூட அது வீணாவதில்லை.

# அறிமுகம்

## 2. கிருஷ்ணுவின் நினைவுகள்

1. **ஸ்ரீ சாஹுஜி மஹாராஜா (1708—1748)**—சத்திரபதி சிவாஜியின் பேரன். இவர் ஸதாராவைத் தம் இராஜதானியாகக் கொண்டு அங்கே வசித்து வந்தார். இவருடைய குழந்தைப் பருவம் முகலாய தர்பார்களில் கழிந்தது.

2. **ஸ்ரீ ஸமர்த்த ராமதாஸர்**—இவர் மஹாராஷ்டிரத்தில் ஒரு பிரசித்த பக்தர், மகாத்மா, சிவாஜி மகாராஜாவின் குரு. இவர் கி. பி. 1607-ஆம் வருஷத்தில் ஸ்ரீராம நவமியன்று பிறந்தவர். குழந்தைப் பருவத்திலிருந்தே இவர் மிக விரக்தராகவும் இராம பக்தராகவும் இருந்தார். பெற்ளேர் இவருக்குத் திருமணம் நிகழ்த்த ஏற்பாடு செய்திருந்தனர். ஆனல், இவர் மண மண்டபத்திலிருந்து எழுந்து ஓடிச்சென்று, நாஸிகைக்கு அருகே ஒரு குகையில் அமர்ந்து தவம் புரியத் தொடங்கினர். பின்பு பல நாட்கள் வரையில் இந்தியாவின் பல தீர்த்த ஸ்தானங்களுக்கு யாத்திரை செய்தார். சிவாஜி மகாராஜா இவர் பெருமையைக் கேள்வியுற்று இவரைத் தரிசிக்க வந்தார். அதிலிருந்து அவர் ராமதாஸரின் சிஷ்யரானர்.

ஸமர்த்த ராமதாஸர் மஹாராஷ்டிரத்தில் மிகப் புகழோங்கிய தரும நூலாகிய 'தாஸபோத'த்தை இயற்றினர்; தேசிய உணர்ச்சியைத் தட்டி எழுப்பினர்; பல மடங்களை ஸ்தாபித்தார். உடல் வலிமையை விருத்திபாக்குவதற்காக கிராமம் கிராமமாக ஹனுமானின் கோயில்களையும் உடற்பயிற்சிச் சாலைகளையும் திறந்துவைத்தார். இவர் தம் வாழ்க்கையில் பல விசித்திரமான அற்புதங்களைச் செய்து காட்டியதாகவும் கூறுகின்றனர். இவருடைய உபதேசங்களும் பஜனைகளும் மஹாராஷ்டிரத்தில் எங்கும் பரவியுள்ளன. மஹாராஷ்டிரத்தின் 'பகவா ஜண்டா' (காவிக் கொடி) இவருடைய திருவருளினல் கிடைத்த ஓர் அரிய பொருள்.

3. **சிவாஜி (1627—1680)**—மஹாராஷ்டிரத்தை ஸ்தாபித்தவரும் ஹிந்து ஸ்வராஜ்யத்தை நிருமாணித்தவரு மாவர். இவருடைய வீரத்தையும், தர்ம நிஷ்டையையும், வள்ளன்மையையும், நீதி தவரு நெறியையும் அறியாதார் யார்!

4. **பேஷ்வா பாஜீராவ் (1720—1740)** — சத்திரபதி சாஹுஜியின் பிரதான மந்திரி. இவர் பூனுவில் வசித்துவந்தார். இவர் பெரிய பராக்கிரமசாலியும் போர்த்திறம் வாய்ந்த சேனுபதியு மாவர்.

5. **ஸர்தார் கோர்படே**—பேஷ்வாக்களின் ஸர்தாராக இருந்தவர்; அச்ச மென்பதையே அறியாத, ஆண்மை மிக்க வீரர். முகலாய பாதுஷாவும் நவாபுகளும் இவரைக் கண்டு பெரிதும் நடுங்கினர்.

6. **படவர்த்தனர்**—பேஷ்வாக்களின் பிராமண ஸர்தார். ஸாங்க்லீ, மீரஜ் முதலிய இடங்களில் இவருடைய ஆட்சி நடந்து வந்தது.

7. **நானா படநவிஸ்**—இவர் பேஷ்வாக்களின் பொருளாதார மந்திரியாகவும் பூனுவிலிருந்த பேஷ்வாக்களின் தர்பாருக்குச் சர்வாதிகாரியாகவும் இருந்தார்.

8. **ராமசாஸ்திரி ப்ரபுணே**—இவர் பேஷ்வாக்களின் நியாயாதிபதியாக இருந்தார். பெரிய வித்வான், பேராற்றல் வாய்ந்த அரசியலறிஞர், தர்மாத்மா, உலகப் பற்றற்றவர், உண்மையான நியாயம் வழங்கிவந்தவர். ஒரு முறை இவர் துர்நடத்தையுள்ள ஒரு பேஷ்வாவுக்குக் கொலைத் தண்டனை விதித்துவிட்டார். ராகோபா பேஷ்வாமீது அவர் தம் சகோதரனின் மகனுன ஸவாயீ மாதவராவ் பேஷ்வாவைக் கொலை செய்ததாகக் குற்றம் சுமத்தப் பட்டபொழுது, அவர் ராமசாஸ்திரியிடம் வந்து தம் குற்றத்துக்காகத் தாம் என்ன பிராயச்சித்தம் செய்யவேண்டு மென்று கேட்டதாகவும், அதற்குப் பக்ஷபாதமும் அச்சமுமற்ற ராமசாஸ்திரி, 'இத்தகைய கொடுவினைக்குக் கொலைத் தண்டனையைத் தவிர வேறு குறைந்த மாற்று இல்லை. மனித வதை செய்யும் உன்னைப்

போன்ற கொடுங்கோல் அரசனின் ராஜ்யத்தில் நீர் அருந்துவது கூட எனக்குப் பாவம்' என்று விடையளித்துவிட்டு தம் பதவியைத் துறந்து, தமது கிராமத்தில் சென்று வசித்ததாகவும் கூறப் படுகின்றது.

9. **ஸ்ரீ அப்பாஸ் ஸாஹப்**—இவர் பெயர் நம் நாட்டில் அப் பாஸ் தையப்ஜீ என்று பிரசித்தமானது. அப்பாஸ் ஸாஹப் மகாத்மா காந்தியின் சிறந்த தோழர்களில் ஒருவராக இருந்தவர். சில வருஷங்கள் வரையில் இவர் பரோடா ராஜ்யத்தில் முக் கிய நியாயாதிபதியாகவும் இருந்தார். அமிருதஸரஸில் ஜலியான் வாலா கொலே விசாரணே நிகழ்ந்தபோது காங்கிரஸால் நியமிக்கப் பட்ட விசாரணேக் கமிட்டியில் இவரும் ஓர் அங்கத்தினராக இருந் தார். அப்போதிலிருந்து இவர் எல்லாவற்றையும் துறந்து தேச சேவைக்காகத் தேசிய இயக்கத்தில் இறங்கிவிட்டார்; சிறைக்கும் போய் வந்தார். மிகப் பரந்த நோக்கங்கள் கொண்ட இப் பெரி யார் தமது எண்பத்திரண்டாவது வயதில் இவ் வுலக வாழ்வை நீத்தார்.

10. **ஸ்ரீ புண்தாம்பேகர்**—இவர் சில காலம் பம்பாயில் தேசிய மஹா வித்யாலயத்தில் ஆசிரியராக இருந்தார். இப்போது இவர் காசி ஹிந்து சர்வகலாசாலேயில் சரித்திரப் பேராசிரிய ராக இருக்கிருர். அரசியலேயும் நாகரிக சாஸ்திரத்தையும் குறித்து ஹிந்தியில் இவர் பல நூல்கள் இயற்றியிருக்கிருர்; 'கைநெச வும் நூற்றலும்' என்னும் தலேப்புடைய மிக உயர்ந்த கட்டுரை யொன்றும் வரைந்திருக்கிருர்.

11. **ஆசார்ய கிட்வானி**—[ஆஸுதாமல் கிட்வானி, எம்.ஏ.] ஆசார்ய கிட்வானி சிந்து மாகாணத்தில் ஒரு தலேசிறந்த கல்வி நிபுணர்; ஆங்கிலத்தில் ஒரு பிரபலமான எழுத்தாளர், உபந்நியா சகர். இவர் குஜராத் வித்யாபீடத்திலும் சிறிது காலம் ஆசிரியராக இருந்தார். பின்பு விருந்தாவனத்தில் பிரேம மஹா வித்யாலயத்தின் தலேமை ஆசிரியர் பதவியை ஏற்று வேலே செய்தார். இவர் காலஞ்சென்று இப்போது சில வருடங்களே ஆகின்றன.

## 3. கங்கைத் தாய்

**1. பீஷ்மன்**—தேவவிரதன் என்ற பீஷ்மன் கௌரவ பாண்டவர்களின் பாட்டனர். இவர் குரு தேசத்தரசனுன சந்தனு மகா ராஜாவின் மைந்தர். 'நான் எது வேண்டுமாயினும் செய்வேன்; நீர் என்னைத் தடுக்கக் கூடாது' என்ற கங்கையின் நிபந்தனையை ஒப்புக்கொண்டு ராஜா சந்தனு அவளை மணந்துகொண்டார். சாந்தனுவுக்குக் கங்கையிடம் ஏழு பிள்ளைகள் பிறந்தார்கள். கங்கை அவர்கள் எல்லோரையும் பிறந்தவுடனே நீரில் எறிந்து விட்டாள். எட்டாவது பிள்ளை (தேவவிரதன்) பிறந்தபோது சந்தனு, அக் குழந்தையைத் தண்ணீரில் எறிய வேண்டா மென்று கங்கையைத் தடுத்தார். அப்போது கங்கை, 'அரசே, தாங்கள் தங்கள் உறுதிமொழியை மீறி நடக்கிறீர்கள்; ஆகவே இனி நான் தங்களோடு வசிக்கமாட்டேன். நான் இந்த என் மகனை இங்கேயே விட்டுப் போகிறேன். இவன் பெரிய வீரனுகவும், தர்மாத்மாவாகவும், பிரதிக்கினை தவருதவனுகவும், வாழ்நாள் முழுதும் பிரம்மசாரியாகவும் இருப்பான்' என்று சொல்லிப் போயினள்.

ஒரு முறை ராஜா சந்தனு ஓர் அழகிய செம்படவப் பெண்ணைக் கண்டு மோகங் கொண்டார். அவள் பெயர் ஸத்தியவதி அல்லது யோஜனகந்தா என்பது. அவர் அப் பெண்ணின் தந்தையான செம்படவ அரசனிடம் சென்று அவளைத் தமக்கு விவாகம் செய்து கொடுக்கும்படி கேட்டார். 'என் பெண் வயிற்றில் பிறக்கும் பிள்ளை தான் அரசுரிமை பெறவேண்டும். ராஜகுமாரனுன தேவவிரதனுக்கு ராஜ்யத்தின்மீது யாதொரு உரிமையும் இருக்கலாகாது. இந்த நிபந்தனை நிறைவேற்றப்பட்டால் நான் என் பெண்ணைத் தங்களுக்கு மணஞ் செய்விக்கச் சம்மதிக்கிறேன்' என்ருன் செம்படவ ராஜன். சந்தனு அதை ஒப்புக்கொள்ள முடியாதவராய், மனமுடைந்து இராஜதானிக்குத் திரும்பினர். தந்தையின் மனவாட்டத்தின் காரணத்தைச் செவியுற்ற தேவவிரதன், தாமே நேராக அந்தச் செம்படவ அரசனிடம் சென்று, தந்தையின் நன்மையைக் கருதித் தாம் அரசுரிமையைத் துறப்பதாகவும், ஸத்திய

வதிக்குப் பிறக்கும் மகனே அரசாள்வா னென்றும் பிரதிக்கினை செய்தார். ஆனால் செம்படவனோ, 'தாங்க ளில்லாவிட்டால் தங்களுக்குப் பிறக்கப் போகும் மகன் அரசுரிமை பெறச் சண்டையிடலாம்!' என்று ஐயமுற்றான். அப்போது தேவவிரதன், 'நான் விவாகமே செய்துகொள்ளாமல் வாழ்நாள் முழுதும் பிரம்மசரியத்தையே அனுஷ்டிப்பேன்' என்று இரண்டாவது பிரதிக்கினை செய்தார். பயங்கரமானதும் கடுமையானதுமான இந்தப் பிரதிக்கினையின் காரணமாக, அவருக்கு 'பீஷ்மன்' என்னும் பெயருண்டாயிற்று.

மகாபாரத யுத்தத்தில் பீஷ்ம பிதாமஹர், கௌரவர்களின் சார்பாகப் பத்து நாட்கள் வரையில் மிக்க தீரத்துடன் கடுமையான போர் புரிந்தார். கடைசியில் அர்ஜுனனால் காயப்படுத்தப் பட்டுச் சரங்களின் படுக்கையில் படுத்தார். அவர் அக் காலத்தில் பெரிய ஞானியாகவும், தர்மாத்மாவாகவும், அரசிய லறிஞராகவும் இருந்தார். பாணங்களின் படுக்கைமீது படுத்தவாறே அவர் யுதிஷ்டிரருக்குப் பல நல்லுபதேசங்கள் புரிந்தார்; அதைப்பற்றி மகாபாரதத்தின் சாந்தி பர்வத்தில் விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது. சூரியன் உத்தராயணத்துக்கு வந்தவுடனே அஷ்டமியன்று அவர் தமது இச்சையால் இவ்வுலக வாழ்வை நீத்தார். அந்தப் புண்ணிய தினம் 'பீஷ்மாஷ்டமி' என்று மிகவும் பிரசித்தி பெற்றிருக்கிறது.

2. **புத்தர்**—கௌதம புத்தர், பௌத்த தர்மத்தின் பிரவர்த்தகரும் உலகப் பிரசித்தி பெற்றவருமான மகாத்மா. அவர் கி. மு. சுமார் 550-ல் நேபாளத்தின் அடிவாரத்தில், கபிலவஸ்துவுக்கு அருகில் 'லும்பினி' என்ற இடத்தில் சுத்தோதனர் என்ற சாக்கிய வம்சத்தரசரின் புதல்வராக அவதரித்தார். அவர் பிறந்த சில நாட்களுக்கெல்லாம் அவர் தாய் இறந்துவிடவே, அவருடைய மாற்றாந் தாயான பிரஜாபதி என்பவள் அவரை எடுத்து வளர்த்தாள். அவருக்குக் கௌதமர் அல்லது சித்தார்த்தர் என்று பெயரிடப்பட்டது. இளம் பருவத்திலேயே அவர் அநேக சாஸ்திரங்களையும் பாஷைகளையும் கலைகளையும் பயின்றதுடன் அஸ்திர வித்தையிலும் வல்லவ ரானார். அவர் எவ்வித விளையாட்டுக்கும் களியாட்டத்துக்கும்

போவதில்லை. தக்க பருவத்தில் அரச குமாரியான யசோதரையை அவருக்கு மணஞ் செய்துவைத்தனர். சுத்தோதனர் அவருடைய உதாசினமான சுபாவத்தைக் கண்டு மனம் நொந்தவராய், அவர் மனத்தைக் களிப்பிப்பதற்காகப் பல அழகிய மாளிகைகளையும், சோலைகளையும், பூங்காவனங்களையும், நாட்டிய சாலைகளையும் நிர்மிக்கச் செய்து சுகபோகங்களுக்குரிய பொருள்களை யெல்லாம் அவைகளிலே குவித்து வைத்தார். அப்போதுங்கூட அவ் வரசிளங் குமரர் உலக சுகங்களை வெறுத்துத் தாம் தனிமையில் வசிப்பதையே பெரிதும் விரும்பலானர். முதலில் ஒரு கிழவனையும், பின்பு ஒரு நோயாளியையும்; அதன்பின் ஒரு பிணத்தையும் கண்டு அவர் மனம் உலகத்தை மேலும் அதிகமாக வெறுக்கலாயிற்று. அதன் பின்னர் அவர் ஒரு சந்நியாசியைத் தரிசித்து, 'உலகத் துன்பங்களிலிருந்து விடுபடுவதற்கு முக்கியமான மார்க்கம் உண்மையான வைராக்கியமே' என்பதை உணர்ந்தார்.

யசோதரைக்கு ஒரு புதல்வன் பிறந்த பின்பு, அவர் இல் வாழ்க்கையைத் துறக்கத் தீர்மானித்துவிட்டார். சில தினங்களுக்கப்பால், ஒரு நாள் இரவில், தம் மனைவி குழந்தையை அணைத்துக் கொண்டு நித்திரையி லாழ்ந்திருக்கையில், அவர் தமது இருபத்தொன்பதாவது வயதில், வீட்டை விட்டகன்று காட்டில் புகுந்து துறவியானர். கயைக்கருகில் 'நெரஞ்சரா' நதிக்கரையில் சில காலம் கடுந்தவம் புரிந்தார். ஏழு வருடங்கள் கழித்து ஒரு நாள் இரவில் மகாபோதி விருட்சத்தின் கீழ் ஆத்ம போத முண்டாகி அவர் திவ்ய ஞானத்தைப் பெற்றார். அன்றையிலிருந்தே அவர் 'புத்தர்' என்று அழைக்கப்படலானர். அவர் தம் மதத்தைப் பரப்புவதற்காகக் காசிக்குச் சென்றார். அங்கே அவருடைய உபதேசங்களைக் கேட்டுப் பலர் அவருக்குச் சிஷ்யராயினர். கொஞ்ச நாட்களிலேயே அநேக அரசர்களும், அரச குமாரர்களும், பல பெரிய பெரிய தனிகர்களும், கனவான்களும் அவருடைய மதத்தைப் பின்பற்றினர்கள். மகத நாட்டரசனன பிம்பசாரரும் அவர்களிலே ஒருவர். கௌதம புத்தர் பல இடங்களுக்கு யாத்திரை செய்து அங்கங்கே தமது மதத்தைப் பரப்பிப் பல்லாயிரக் கணக்கான

பேர்களைத் தம் சிஷ்யர்களாக்கிக் கொண்டார். அவர் தமது நாற்பத்து நான்காம் வயதில் பிகாரிலும் காசியிலும் அவைகளுக்கு அக்கம் பக்கத்திலுள்ள இடங்களிலும் தர்மப் பிரசாரம் செய்தார்.

கி. மு. 477-ல், எண்பதாவது வயதில், அவர் குசிநகரத்துக்கு அருகிலுள்ள காட்டிலே, இரண்டு மரங்களுக்கு நடுவில், நிர்வாணப் பதவி பெற்ருர். ஹிந்துக்களின் சாஸ்திரங்கள், புத்த பகவானை மகாவிஷ்ணுவின் பத்து அவதாரங்களில் ஒன்பதாவது அவதாரமாகக் கருதுகின்றன. ஜப்பான், சீன, பர்மா, இலங்கை, திப்பத் முதலிய நாடுகளிலும் பௌத்த மதம் தழைத்தோங்கியிருக்கிறது.

3. **மகாவீரர்** — ஜைனர்களின் இருபத்து நான்காவது கடைசி தீர்த்தங்கரராகிய மகாவீரர், புத்தரின் காலத்திலேயே வாழ்ந்தவர். புத்தரைப் போலவே அவரும் ஓர் அரச குமாரராக இருந்தவர். அவர் பெயர் வர்த்தமானர் என்பது. மிகவும் சாந்த சுபாவமும் தூய ஒழுக்கமுமுடையவரான வர்த்தமானர், முப்பதாம் வயதில், தமது ராஜ்யத்தையும், குடும்பத்தையும் முழு வைபவங்களையும் துறந்துவிட்டு, காட்டில் சென்று பன்னிரண்டு வருஷ காலம் கடுந்தவம் புரிந்தார். பின்பு அவர் பல இடங்களில் பிரயாணஞ் செய்து தம் கொள்கையைப் பரவச் செய்தார். அவர் வாழ்ந்திருந்த காலத்திலேயே ஜைன மதம் மகத நாடு முழுவதிலும் பரவி விட்டதாகக் கூறப்படுகிறது. அவருடைய மதத்தைச் சேர்ந்தவர்கள் (ஜைனர்கள்) இந்தியாவில் எல்லா மாகாணங்களிலும் வசிக்கிருர்கள்.

4. **அசோகன்** (கி. மு. 274—232) — பாரத நாட்டின் பண்டைச் சக்கரவர்த்திகளில் ஒருவர். இவர் பாடலிபுத்திரத்தைத் தம் தலைநகராகக் கொண்டு ஒரு பெரிய சாம்ராஜ்யத்தின் மன்னராக இருந்ததுமன்றி பௌத்த மதத்தின்—அமைதியும் பொறுமையுமே உருவாக எடுத்த தர்மத்தின்—இணையற்ற பிரசாரகராகவும் இருந்தார். இவருடைய கட்டளைகள் இந்தியாவில் பல இடங்களிலும் கல் தூண்களிலும் குன்றுகளிலும் சாஸனங்களாகப் பொறிக்கப்பட்டுள்ளன.

5. **ஸமுத்திரகுப்தன்** — இவர் குப்த வம்சத்தைச் சேர்ந்த மிகப் பெரிய புகழ்பெற்ற, பராக்கிரமசாலியான சக்கரவர்த்தி. இவர் கி. பி. 335 முதல் 375 வரையில் வாழ்ந்தவர். இவர் பல பெரிய பெரிய நாடுகளை ஜயித்து குப்த சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்தார். இவருடைய ராஜ்யம் ஹூக்ளியிலிருந்து சம்பல் வரையிலும், இமயமலையிலிருந்து நர்மதை வரையிலும் பரவி யிருந்தது. பாடலிபுத்திரம் இவருடைய இராஜதானியாக இருந்தது. இவர் ஓர் அசுவமேத யாகமும் செய்தார்.

6. **ஹர்ஷன்**(606—647) — தானேசுவரத்து இந்திய சக்கரவர்த்தியான ஹர்ஷன் மிகப் பெரிய பராக்கிரமசாலியாகவும் கல்விப் பிரியராகவும் இருந்தவர். இவர் பௌத்தர்களையும் பிராமணர்களையும் சமமாகப் பாவித்து இரு சாராருக்கும் புகலிடமாக விளங்கினர். கி. பி. 647-ல் இவர் உயிர் துறந்தார். ஸம்ஸ்கிருதத்தில் புகழ்பெற்ற கவியாகிய பாணபட்டர் இவருடைய சபையிலே இருந்தவர். பிரசித்தி பெற்ற சீன யாத்திரிகராகிய ஹியுவன்ஸாங் இவருடைய காலத்தில்தான் இந்தியாவுக்கு வந்திருந்தார்.

7-8. **துளஸீதாஸரும், கபீர்தாஸரும்**—இவ்விருவரும் ஹிந்தி பாஷையில் மிகப் புகழோங்கிய பக்த கவிகள். வட இந்தியாவில் முந்தியவர் இயற்றிய இராமாயணத்தையும் பிந்தியவர் இயற்றிய பாடல்களையும் அறியாதவர் மிகச் சிலரே.

9. **வடகாசி**—இது ஹரித்துவாரத்துக்கு வடக்கிலுள்ள ஒரு தீர்த்த ஸ்தானம். உத்தரகாசி யென்று கூறப்படுகிறது. பத்திரீ நாராயணத்துக்கு யாத்திரை செய்பவர்கள் இதைக் கடந்துதான் செல்லவேண்டும்.

10. **தேவப் பிரயாகை** — இமயமலையில் டிஹரீ ஜில்லாவைச் சேர்ந்த ஒரு தீர்த்த ஸ்தானம். இது கங்கையும் அலகநந்தாவும் கூடுமிடத்தில் இருக்கிறது.

**11. சர்மிஷ்டையும் தேவயானியும்**—சர்மிஷ்டையென்பவள் தைத்தியர்களின் அரசனான விருஷபர்வாவின் பெண்; சுக்கிராசாரியரின் பெண்ணாகிய தேவயானியின் தோழி.

ஒரு தடவை இருவரும் கரைமீது துணிகளை வைத்துவிட்டு ஒரு பொய்கையில் இறங்கி ஜலவிஹாரம் செய்தார்கள். சர்மிஷ்டை, அவசரத்தில் மறந்துபோய், தேவயானியின் துணிகளை உடுத்திக்கொண்டு கரைக்கு வெளியே வந்தாள். அதனால் இருவருக்கும் சச்சரவு உண்டாகி, சர்மிஷ்டை தேவயானியை ஒரு கிணற்றிலே தள்ளிவிட்டாள். தேவயானி இறந்து போயிருப்பாள் என்று நினைத்துக்கொண்டே சர்மிஷ்டை வீடு திரும்பினாள். இதனிடையே நகுஷ ராஜாவின் மகனான யயாதி அங்கே வேட்டையாட வந்தான். அவன் தேவயானியைக் கிணற்றினின்றும் வெளியே தூக்கினான். தேவயானி யயாதியை விவாகம் செய்துகொண்ட தருணத்தில், தன் தந்தையிடம், 'சர்மிஷ்டை தங்களைப் பெரிதும் அவமதிப்பதால் அவளைத் தாங்கள் எனக்கு அடிமையாக்கிச் சீதனமாகக் கொடுக்கவேண்டு மென்பது என் விருப்பம்' என்று கலகம் செய்தாள். சுக்கிராசாரியர் கன்னியா தானத்தோடு கூடவே சர்மிஷ்டையை அடிமையாக்கித் தேவயானிக்குக் கொடுத்தார்.

## 4. யமுனை ராணி

**1. பானீபட்**— சரித்திரப் பிரசித்தி பெற்ற இடம். யமுனையின் கரையி லிருக்கிறது. பானீபட்டின் மைதானத்தில்தான் முகம்மதியர்களுக்கும் மராட்டியர்களுக்கு மிடையே மிகப் பிரசித்தமான போர் (மூன்றாவது பானீபட் யுத்தம்—1761) நிகழ்ந்தது.

**2. பாபர் (1526-1530)**—ஹுமாயூனின் தந்தை; இந்தியாவின் முதல் முகலாயச் சக்கரவர்த்தி.

**3. ஷாஜஹான் (1627—1658)**—ஜஹாங்கீர் சக்கரவர்த்தியின் புதல்வர். இவர் கி. பி. 1627-ல் டில்லி சிம்மாசனத்தில் அமர்ந்தார். இவரிடம் குடிகள் மிகவும் சுலபமாக நியாயத்தைக்

கோர வருவதற்கு ஏற்ற ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. இவருடைய சேனைத் தலைவர்களில் பலர் ஹிந்துக்கள். கிறிஸ்தவ மதத்துக்கும் இவர் உதவிபுரிந்தார். இவர் தமது காலத்தில் பல அழகிய கட்டிடங்களைக் கட்டினார். இவருடைய கீர்த்தியை என்றும் அழியாமல் வைப்பது அக் கட்டிடங்களில் மிகச் சிறந்ததான ஆக்ராவின் தாஜ்மஹல்தான். இன்று அதற்கிணையான மற்றொரு கட்டிடம் உலகத்திலேயே இல்லை. ஷாஜஹான் தம் மனைவி மும்தாஜ்மஹலைப் பெரிதும் நேசித்துவந்தார். அவள் இறந்து விட்ட பின் அவளுடைய ஞாபகார்த்தமாக தாஜ்மஹல் கட்டப்பட்டது. இந்தக் கட்டிடம் பதினெட்டு வருஷங்களில் கட்டி முடிந்தது. இருபதினாயிரம் வேலையாட்கள் இடைவிடாமல் இதற்காக வேலை செய்தனர். இவ் வழகிய கட்டிடத்தைக் கட்டுவதற்கு ஏறக்குறைய முப்பத்தாறு கோடி ரூபாய்கள் செலவழிந்தன. இந்தியாவுக்கு வரும் ஆயிரக் கணக்கான உலக யாத்திரிகர்கள் ஆக்ராவிலுள்ள இந்தத் தாஜ்மஹலைப் பார்க்காமல் திரும்பிச் செல்வதில்லை. தாஜ்மஹலைக் காணும்போது, 'சக்கரவர்த்தி ஷாஜஹானுக்கு ராணி மும்தாஜ்மஹலின் மீதிருந்த தெய்விகக் காதலின் முளை, ஆக்ராவில் ஊன்றி, யமுனை நீரின் குளிர்ச்சியால் இவ் வடிவு பெற்றதோ!' என்று தோன்றுகிறது.

## 7. தென்னாட்டின் கங்கை

**1. வால்மீகி**—இவர் வடமொழியில் இராமாயணத்தை இயற்றியவர்; ஸம்ஸ்கிருதத்தின் ஆதிகவி. இவர் தமஸா நதிக்கரையில் வசித்துவந்தார். ஒருநாள் இவர் தம் சிஷ்யர்களுடன், ஸ்நானம் செய்ய நதிக்கரைக்குச் சென்றார். அங்கே ஒரு வேடன் கிரௌஞ்சப் பறவை யொன்றை அடித்துக் கொன்றுவிட்டான்; பெண் கிரௌஞ்சம் துன்பம் தாளாமல் வீறிட்டுப் புரண்டழுதது. அந்த உருக்கமான காட்சியைக் கண்டு முனிவரின் இதயம் துன்புற்றது. சோகம் ச்லோகமாக மாறியது. அவருடைய திருமுகத்தினின்றும் ஓர் அழகிய எளிய ஸம்ஸ்கிருத ச்லோகம் அநுஷ்டுப் சந்தஸ்ஸில் வெளிவந்தது. முனிவருக்கு இந்தச் சந்தஸ் மிகவும்

விருப்பமாக இருந்ததனல் அவர் தமது இராமாயண மகாகாவியம் முழுவதையும் அதே சந்தஸ்ஸில் இயற்றி முடித்துவிட்டார்.

2. **ராஜா ரந்திதேவன்** — ஒரு பெரு வள்ளல். இவர் பல யக்ஞ-யாகங்களைச் செய்தார். அவைகளில் கொல்லப்பட்ட யாக பசுக்களின் சருமத்தால் நதிக்கரை மூடப்பட்டுவிட்டது. அதனுல்தான் அந்த நதிக்குச் 'சர்மண்வதி' என்ற பெயருண்டா யிற்று. தம்மிடமிருந்த எல்லாச் சொத்தையும் கொடுத்துவிட்ட பின் நாற்பத்தெட்டு நாட்கள் வரையில் இவருக்குத் தண்ணீர்கூட அருந்தக் கிடைக்கவில்லை. நாற்பத்தொன்பதாவது நாள் இவர் ஏதோ சமையல் செய்ய முயன்றபோது, முறையே ஓர் அந்தண ரும், ஒரு சூத்திரரும், ஒரு நாயை அழைத்துக்கொண்டு அதிதி யொருவரும் வந்து சேர்ந்தார்கள். இவரிடமிருந்த பண்டங்கள் அவர்களை வரவேற்பதிலேயே செலவழிந்து போய்விட்டன; தண் ணீர்தான் மீதியிருந்தது. அதைக் குடிக்க இவர் கையைத் தூக் கியபொழுது தாகத்தினுல் வாடிய சண்டாள ஞெருவன் இவரிடம் வந்து, குடிக்க நீர் கேட்டான். அரசர் அதையும் கொடுத்து விட்டார். கடைசியில் கடவுள் பிரசன்னமாகி இவருக்கு மோட்ச மளித்தார்.

3. **ஞானேச்வரப் பெரியார்**—இவர் மஹாராஷ்டிரத்தின் ஆதிகவியும் பக்தருமாவர். இவருடைய தகப்பனுர் துறவறம் பூண்ட பின்பு மீண்டும் கிருகஸ்தாசிரமத்துக்கு வந்தார். அதனுல் ஞானேச்வரரையும் அவருடைய உறவினர்களையும் அவருடைய ஜாதிக்காரர்கள் பகிஷ்காரம் செய்துவிட்டார்கள். ஞானேச்வரர் இயற்றிய பகவத்கீதையின் உரை, 'ஞானதேவி' அல்லது 'ஞானேச்வரீ' என்னும் பெயரால் பிரசித்தமா யிருக்கிறது, அவர் ஓர் அத்வைதவாதியான பக்தர், ஆனுல் அவருடைய பரம்பரை வைஷ்ணவர்களின் நாதசம்பிரதாயத்தைச் சேர்ந்தது. முப்பத் திரண்டாவது வயதிலேயே அவர் உயிருடன் சமாதியில் இறங்கி விட்டார்.

# சிறப்புப் பெயர் விளக்கம்

பக்கம்

1. மார்க்கண்டி — நதி. பைஜ்நாத் — மலை.

2. யமன் — தேவன்; மிருத்தியு தேவதை.
சங்கரர் — சிவபெருமானின் மறு பெயர்.
மார்க்கண்டேயர் — ரிஷி.

3. மிருகண்டு — ரிஷி; மார்க்கண்டேயரின் தந்தை.
மகாதேவர், மிருத்தியுஞ்ஜயர் — சிவபெருமானின் மறு பெயர்கள்.

4. மிருகசீர்ஷம் — நட்சத்திரம்.

5. கிருஷ்ணா — நதி.
மாஹூலி — மஹாராஷ்டிரத்தில் ஓர் இடம். இங்கு வேண்யா நதி கிருஷ்ணாவைச் சந்திக்கிறது.
ஸதாரா — மஹாராஷ்டிர மாகாணத்தில் ஒரு ஜில்லாவும் பட்டணமுமாகும்.
சாஹூஜி மஹாராஜா — அனுபந்தம் 1 காண்க.

6. ஸஹ்யாத்திரி — மேற்குத் தொடர்ச்சி மலைகளில் ஒன்று; பம்பாய் மாகாணத்திலுள்ளது.
மஹாபலேச்வரம் — கோடை வாசஸ்தலம்.
வேண்யா — கிருஷ்ணாவின் உபநதி.

7. நரஸோபாவின் தோட்டம் — ஸதாராவின் அருகில் ஒரு தீர்த்த ஸ்தானம்.

8. ஸாங்க்லீ — ரெயில்வே ஸ்டேஷன். மீரஜ்ஜிலிருந்து ஸாங்க்லீக்குத் தனிப் பாதை ஓடுகிறது.

9. சிஞ்ச்லீ — பெல்காமிலிருந்து மீரஜ்ஜூக்குப் போகும் பாதையிலுள்ள ரெயில்வே ஸ்டேஷன்.
ஸமர்த்த ராமதாஸர் — சிவாஜியின் குரு. அநுபந்தம் 1 காண்க.

பக்கம்

9. சிவாஜி மகாராஜா, பாஜீராவ், ஸர்தார் கோர்படே, படவர்த்தனர், நானா படநவீஸ், ராமசாஸ்திரி ப்ரபுணே — அனுபந்தம் 1 காண்க.

தேஹூ — பூனாவின் அருகில் இந்திராயணி நதிக்கரையிலுள்ள தீர்த்த ஸ்தலம்.

ஆளந்தி — துகாராம் பெரியாரும் மகாத்மா ஞானேச்வரும் சமாதிநிலை யடைந்த ஸ்தலம். அவர்களின் சமாதிகள் இங்கே இருக்கின்றன. இதுவும் பூனாவின் அருகே இந்திராயணி நதிக்கரையில்தான் இருக்கிறது. பஞ்சாப் சிந்து மாகாணத்தினர் தமது இறந்த உறவினர்களின் அஸ்திகளை ஹரித்துவாரத்தில் கங்கையில் கொண்டு சேர்ப்பது போல மஹாராஷ்டிரவாசிகள் தமது இறந்த உறவினர்களின் அஸ்திகளை ஆளந்தியில் கொண்டு சேர்ப்பது வழக்கம்.

பண்டரபுரம் — யாத்திரை ஸ்தலம்.

சந்திரபாகா — கிருஷ்ணாவின் உபநதி.

பீமா — சந்திரபாகா நதியின் மறு பெயர்.

கங்கை — ஜீவ நதி. 1500 மைல் நீளமுள்ளது.

துங்கை — துங்கபத்திரையின் மறு பெயர்.

10. துங்கபத்திரை — கிருஷ்ணாவின் உபநதி.

பூனா — பேஷ்வாக்களின் பழைய தலைநகரம். இப்போது ஒரு முக்கிய இராணுவ ஸ்தலம்.

பெல்காம் — பெல்காம் ஜில்லாவின் முக்கிய பட்டணம்; ஓர் இராணுவ ஸ்தலம்.

கூட்சி — பெல்காமிலிருந்து மீரஜ் செல்லும் பாதையில் சிஞ்ச்லீக்கு அடுத்த ஸ்டேஷன்.

11. அனந்த புவா மடேர்கர் — பிரம்மசாரி; தேசசேவகர்.

கங்கோத்திரி — இமயமலையில் ஓர் இடம்.

அமரநாத் — இமயமலையில் ஓர் இடம்.

12. வாயி — கிருஷ்ணா நதிக்கரையில் அமைந்த ஒரு பட்டணம். இது ஒரு காலத்தில் மஹாராஷ்டிரர்களின் இராஜதானியாக இருந்தது.

13. லோகமான்ய திலகர் — ஸ்வராஜ்ய முனிவர்.

பக்கம்

13. பெஜவாடா — சென்னையிலிருந்து 268 மைல் தூரத்தில் கல்கத்தா போகும் மார்க்கத்தில் உள்ள ஒரு ரெயில்வே ஜங்க்ஷன்.
அப்பாஸ் ஸாஹப், புண்தாம்பேகர், கிட்வானி—அனுபந்தம் 1 காண்க.

14. வாரணு — கிருஷ்ணுவின் உபநதி.
கோயனு — கிருஷ்ணுவின் உபநதி.

15. தேவவிரதன் — பீஷ்மனின் முதற் பெயர்.
பீஷ்மன் — அனுபந்தம் 1 காண்க.

16. வியாஸர் — மகாபாரதத்தை இயற்றியவர்; வேதங்களைத் தொகுத்தவர்.
வால்மீகி, புத்தர், மஹாவீரர், அசோகன், ஸமுத்திரகுப்தன், ஹர்ஷன், துளஸீதாஸ், கபீர்தாஸ்—அனுபந்தம் 1 காண்க.

17. வடகாசி — அனுபந்தம் 1 காண்க.
தேவப்பிரயாகை — ,,
அலகநந்தா — நதி.
லக்ஷ்மணஜூலா — இமயமலையின் அடிவாரத்திலுள்ள ஓர் இடம்.
ஹரித்துவாரம் — புண்ணிய ஸ்தலம்.
கான்பூர் — சரித்திரப் பிரசித்தி பெற்ற இடம்.
பிரயாகை—புண்ணிய ஸ்தலம்.
சகுந்தலை—துஷ்யந்தனின் காதலி; பரதனின் தாய்.
திரௌபதி—பஞ்ச பாண்டவர்களின் மனைவி.

18. சர்மிஷ்டை—அனுபந்தம் 1 காண்க.
தேவயானி— ,, ,,
டில்லி—இந்தியாவின் தலைநகரம்.
ஆக்ரா—சரித்திரப் பிரசித்தி பெற்ற இடம்.
மதுரை—புண்ணிய ஸ்தலம்.
விருந்தாவனம்—புண்ணிய ஸ்தலம்.
யமுனை—கங்கையின் உபநதி.
கிருஷ்ணன்—திரௌபதியின் சேலையை வளர்த்தவன்; பாண்டவர்களின் தூதன்; அர்ஜுனனுக்குக் கீதோபதேசம் செய்த பகவான்.

பக்கம்

18. அயோத்தி—புண்ணிய ஸ்தலம்.
ஸரயூ—கங்கையின் உபநதி.
இராமபிரான்—இராமாயணத்தின் கதாநாயகன்.
சம்பல்—கங்கையின் உபநதி. 'ராஜா ரந்திதேவனின் கீர்த்தியே இவ்வுலகத்தில் நதியுருவமாகப் பாய்கிறது' என்பது மகாகவி காளிதாஸன் வாக்கு. 'சர்மண்வதீ' என்பது இதன் பழைய பெயர்.
ரந்திதேவன்—அனுபந்தம் 1 காண்க.

19. சோணபத்திரம்—கங்கையின் உபநதி.
பாடலிபுரம்—மகத சாம்ராஜ்யத்தின் தலைநகரமாக இருந்தது. இப்போது பட்னு எனப்படுகிறது.
கண்டகி—கங்கையின் உபநதி.
ஜனகன்—மிதிலை நாட்டரசன்; சீதையின் தந்தை.
பிரம்மபுத்திரா—இந்தியாவில் மிகவும் நீளமான நதிகளில் இரண்டாவது; 1680 மைல் நீளமுள்ளது.
ஆஸாம்—மாகாணம்.

20. கோலந்தோ—கங்கையும் பிரம்மபுத்திராவும் சேரும் இடம்.
பத்மா—கங்கையும் பிரம்மபுத்திராவும் ஒன்ருகி ஓடும் நதி.
மேகனு—பத்மாவே பின்னும் மேலே சென்று இப்பெயர் பெறுகிருள்.
சுந்தரவனம்—கங்கையின் முகத்துவாரத்திலுள்ள மூங்கிற் காடுகளின் பெயர்.
சகரன்—பண்டைய இந்தியாவின் ஒரு சக்கரவர்த்தி.
இலங்கை—தீவு. ஜாவா—தீவு. ஜப்பான்—நாடு.

22. அஸிதர்—முனிவர்.

23. தேவாதிதேவன்—சிவபெருமானின் மறு பெயர்.
தண்டால் மலை—மலை.

24. தெஹராதூன்—இமாலயப் பிரதேசத்தில் உள்ள இடம். காட்டுக் கலாசாலைக்கும் இராணுவக் கலா சாலைக்கும் பேர்போனது.
டேஹரி—ஐக்கிய மாகாணத்தில் கட்வால் ஸம்ஸ்தானம்.
ஸ்ரீநகர்—டேஹரியின் தலைநகரம்.

பக்கம்

24. கன்னேஜ்—சரித்திரப் பிரசித்தி பெற்ற இடம்.
பிரம்மாவர்த்தம்—யாத்திரை ஸ்தலம்.
குருக்ஷேத்திரம்—புண்ணிய ஸ்தலம்; மகாபாரதப் போர் நிகழ்ந்த இடம். இது தானேச்வரத்துக்குச் சற்று தென்கிழக்கே உள்ளது.
பானீபட்—அனுபந்தம் 1 காண்க.

25. ஸ்வாமி சிரத்தானந்தர்—ஆரிய சமாஜத் தலைவர்.
பாபர்—அனுபந்தம் 1 காண்க.
கோகுலம்—யமுனையின் அக்கரையில் உள்ள புண்ணிய ஸ்தலம்; இக்கரையிலுள்ளது விருந்தாவனம்.
ஹரியாணு—வளமுடைய பசுக்களுக்குப் பேர்போன இடம்.
யசோதை—கிருஷ்ணனின் வளர்ப்புத் தாய்.
நந்தகோபன்—இடையர்களின் அரசன்.
ஹஸ்தினுபுரம்—கௌரவர்களின் இராஜதானி.

26. மும்தாஜ்மஹல்—ஷாஜஹானின் மனைவி.
ஷாஜஹான்—அனுபந்தம் 1 காண்க.
சர்மண்வதி—சம்பல் நதியின் பழைய பெயர்.
சின்னஞ் சிறு சிந்து நதி—இது பஞ்சாப்-சிந்து மாகாணத்தைச் சேர்ந்த சிந்து நதியினின்றும் வேறுபட்டது. மத்திய இந்தியாவிலிருந்து வரும் இந்த உபநதி யமுனையில் வந்து சேருகிறது.

27. கால்பீ—சரித்திரப் பிரசித்தி பெற்ற இடம்.
அக்பர்—முகலாயச் சக்கரவர்த்தி.
காளிதாஸன்—ஸம்ஸ்கிருதக் கவி.

30. ருட்கீ—நகரம்; அம்பாலாவுக்குத் தென் கிழக்காக உள்ள ஸ்டேஷன்.
காகாஜீ—காகா காலேல்கரின் சுருக்கமான பெயர். 'காகா' என்ருல் சிற்றப்பா என்று பொருள். குஜராத் வித்தியாபீடத்தின் ஆசிரியர்கள் ஒரே பரிவாரமாக வசித்துவந்த போது இவருக்கு ஏற்பட்ட இந்தப் பெயரே பின்பு நிலைத்துவிட்டது. இவருடைய முழுப் பெயர் தத்தாத்ரேய பால கிருஷ்ண காலேல்கர் என்பது.

31. ஸோலாணு—நதி.

பக்கம்

34\. ஸ்வர்ண பூமி—பர்மாவின் மறு பெயர்.
ஐராவதி—நதி. ஐராவதம்—இந்திரனுடைய யானை.
பிரம்மதேசம்—பர்மாவின் மறு பெயர்.

35\. ரங்கூன்—பர்மாவின் தலைநகரம்.
மாண்டலே— ஒரு முக்கிய நகரம். ரங்கூனிலிருந்து இவ்விடத்துக்கு இருப்புப்பாதை போகிறது.
அமராபுரா—ஐராவதி நதிக்கருகிலுள்ள ஒரு பட்டணம்.

36\. சாணேந்த கர்நாலி—நர்மதை நதியின் கரையிலுள்ள ஓர் இடம்.
நர்மதை—நதி. தப்தி—நதி.
காச்மீரம்—இமாலயங்களின் முக்கிய மலைத்தொடருக்கும் உள் தொடருக்கும் இடையேயுள்ள அகண்ட பள்ளத்தாக்கில் இருக்கும் தேசம்.
விதஸ்தை—ஜேலம் நதியின் மறு பெயர்.
கோமாந்தகம்—கோவாவின் மறு பெயர்.
ஆராகான்—மலை. பெகுயோமா—மலை.

40\. சிந்த்வீன்—ஐராவதியின் உபநதி.
துகாராம்—மஹாராஷ்டிரத்தின் பக்தப் பெரியார்.
பவபூதி—ஸம்ஸ்கிருதக் கவி.
உத்தரராம சரிதம்—பவபூதி எழுதிய ஸம்ஸ்கிருத நாடகம்.
சான் ராஜ்யம்—நாடு.

41\. பகோகு—பர்மாவில் ஒரு துறைமுகம்.
யெனன்ஜாம்—பர்மாவில் மண்ணெண்ணெய்க் கிணறுகள் ஏராளமாக உள்ள இடம்.

42\. ப்ரோம்—ஐராவதிக் கரையிலுள்ள நகரம்; இங்கிருந்து ரங்கூனுக்கு ரயில்பாதை செல்லுகிறது.

45\. திரியம்பக மலை—மலை. ராஜமஹேந்திரி—நகரம்.
விந்திய மலை—மலை. ஸாத்பூடா—மலை.
ஹைதராபாத்—ராஜ்யம். மைசூர்—ராஜ்யம்.
எகிப்து—தேசம். நீலநதி—எகிப்திலுள்ள பெரிய நதி.

46\. பிரம்மகிரி—கோதாவரியின் உற்பத்தி ஸ்தானத்துக்கு அருகிலுள்ள இடம்.

**பக்கம்**

46. நாஸிக்—சரித்திரப் பிரசித்தி பெற்ற நகரம்.
பைடண்—சரித்திரப் பிரசித்தி பெற்ற நகரம். இதன் பண்டைப் பெயர் பிரதிஷ்டான நகரம் என்பது.
சீதை—இராமாயணத்தின் கதாநாயகி.
இலக்குமணன்—இராமபிரானின் இளைய தம்பி.

47. ஜனஸ்தானம்—ஒரு காலத்தில் காடாக இருந்த இடம்.
பஞ்சவடி—சீதையின் பிரிவுக்கு முன்பு இராமபிரான் தங்கியிருந்த இடம்.
ஜடாயு—சீதையைக் காக்க முயன்று உயிர்விட்ட பட்சி-ராஜன்.

48. ஹனுமான்—அஞ்சனையின் புதல்வர்; இராமதூதர்.
இலக்குவன்—இலக்குமணனின் மறு பெயர்.
கிஷ்கிந்தை—வானரர்களும் வானரராஜனான சுக்கிரீவனும் வசித்த பட்டணம்.
ஞானேச்வரப் பெரியார்—அனுபந்தம் 1 காண்க.

49. சங்கராசாரியார்—அத்வைத வேதாந்தத்தைப் பரப்பியவர்.
அஞ்சனா—மலை.

50. தாரணா, காதவா, ப்ரவரா, மூலா, வர்தா, பைன்கங்கா, ப்ராணஹிதா, அஷ்டவக்கிரா, இந்திராவதி, ச்ரமணி—கோதாவரியின் உபநதிகள்.
பத்திராசலம்—யாத்திரை ஸ்தலம்.

51. தவளேசுவரம்—யாத்திரை ஸ்தலம்.

52. யானம்—பிரெஞ்சுக்காரர்களுக்குச் சொந்தமான இடம்.

53. கொவ்வூர்—ராஜமகேந்திரியிலிருந்து நிடதவோலுக்குச் செல்லும் பாதையில் 'கோதாவரி'க்கு அடுத்த ஸ்டேஷன்.

# அரும் பதங்களுக்கு அர்த்தம்

காகாஜீயின் முன்னுரை

பக்கம்

iv. ஸப்த—ஏழு. சங்கோசம்—கூச்சம்.
அஞ்சலி—கைகுவித்தல்.

v. மண்—பூமி. விண்ணகம்—சுவர்க்கம், வானுலகம்.
ஸரிதை—நதி.
ஸம்ஸ்காரம்—மெருகு கொடுத்தல், தூய்மைப்படுத்துதல்.

vi. விருந்தோம்பல் — விருந்ினரை உபசரித்தல், அதிதி சத்காரம்.

1. தோழி மார்க்கண்டி

2. உபாக்கியானம்—சரித்திரம் ; கதை.

3. அநீதம்—அநியாயம்.
மிருத்யுஞ்ஜயர்—சாவை வென்றவர் ; சிவபெருமான்.
ஆயுள் தாரை—ஆயுள் வெள்ளம்.
ப்ராத்ரு த்விதீயை—ஒரு பண்டிகை ; அன்று சகோதரன் சகோதரியின் வீட்டுக்கு விருந்தாளியாக வருவது வழக்கம். யமதர்ம ராஜன் அன்று தம் சகோதரியான யமுனையின் வீட்டுக்குச் சென்று வந்ததாகப் புராணங்கள் கூறுகின்றன.

4. கோமள—மென்மையான. லாவண்யம்—எழில்.

2. கிருஷ்ணுவின் நினைவுகள்

5. ஆவலித்தல்—ஆசைப்படுதல்.

6. ஜல விஹாரம்—நீர் விளையாட்டு.

8. செறிந்த—மிகுந்த.
வரை—மலை. ஜங்கமம்—அசையும் பொருள்
தாவரம்—அசையாப் பொருள்.

பக்கம்

9. ஆராத்திய தேவதை—போற்றுதற்குரிய தெய்வம்.
பவித்திரர்—சுத்தர், தூயவர்.
பக்திபுரி—பக்திப் பட்டணம்.

10. அஸ்தி—எலும்பு.
சாதுர்மாஸ்யம்—மாரிகாலத்தின் நான்கு மாதங்கள்.

11. மதோன்மத்தன்—மதத்தினால் பைத்தியமானவன்.
கஜராஜன்—யானைகளின் வேந்தன்; மிகப் பெரிய யானை.
கர்ப்பத்தில்—அடித்தலத்தில்.

13. பணி—தொண்டு.
விச்வரூபம்—மிகப் பெரிய பரந்த உருவம்.

3. கங்கைத் தாய்

15. ஆதர்சங்கள்—இலக்கியங்கள், லட்சியங்கள்.
நதி தீரம்—நதிக் கரை. முகில்—மேகம்.
கணங்கள்—கூட்டங்கள்.

16. அமர காவியங்கள்—அழியாத (சாவில்லாக்) காவியங்கள்.
விஹாரங்கள்—பௌத்த ஜைன சந்நியாசிகள் வசிக்கும் மடங்கள்; ஸங்கா்ராமங்கள்.
தண்மை—குளிர்ச்சி.

17. லோக பாவனமான—உலகத்தைத் தூயதாக்கவல்ல.
திரிவேணீ—யமுனை, கங்கை, ஸரஸ்வதி ஆகிய மூன்று நதிகளும் கூடுமிடம்.
ஆகிருதி—வடிவம்.

18. சௌபாக்கியவதி—மிகுந்த பாக்கியத்துடன் (கணவனுடன்) வாழ்பவள்.
ஆதர்ச சக்கரவர்த்தி—இலக்கியமாக அமைந்த தனி மன்னன் (Ideal emperor).

19. பிரசண்டமான—வலிதான.

21. வன்மை—வலிமை; பலம்.

4. யமுனை ராணி

23. தேவாதிதேவன்—தேவர்களின் தலைவன்.

24. பண்டைய—பழைய.

பக்கம்

25\. வேய்ங்குழல்—மூங்கிற் குழல்.
சோபை—ஒளி ; அழகு. ரமணீயமான—அழகிய.
கிரீடா பூமி—விளையாடுமிடம். தலம்—இடம்.
காளியமர்த்தனம்—காளியப் பாம்பை அடக்குதல்.

26\. யோகமூர்த்தி—யோக வடிவம். (யோகம் என்பது சித்தத்தின் இயக்கங்களை அடக்குதல்.)
இருதய - பேதகமாக—உள்ளத்தைப் பிளக்கவல்லதாக.

27\. அகண்டமாக—பிளவற்று.

28\. நெய்தல் பூ—கருங் குவளை. மானத வாவி—மானஸ ஸரோவர் (மானஸரோவர் என்று கூறுவது பிழை.)
ஹம்ஸம்—அன்னப் பறவை. அன்னங்களிலே இரண்டு வகைகள் உள்ளன. வெண்ணிற அன்னத்தை ‘ராஜஹம்ஸம்’ என்றும், நீல நிற அன்னத்தை ‘கலஹம்ஸம்’ அல்லது ‘காதம்பம்’ என்றும் கூறுகிறார்கள்.
காதம்பப் பறவை—நீல அன்னப் பறவை.

5\. நதியின் மேல் கால்வாய்

32\. உத்வேகம்—ஆத்திரம்.
பராதீனப் பெண்—பிறருக்கு (இருபுறத்துச் சுவர்களுக்கு) அடங்கிய பெண்.

33\. பகீரதக் கல்வி—நீர்ப்பாசன முறை.
கலைப் பண்பு—கலையினால் பண்பட்ட நாகரிகம் (Culture).

6\. ஸ்வர்ண பூமியின் தாய்

34\. ஸ்வர்ண பூமி—பொன் நாடு—பிரம்மதேசம்—பர்மா.
பிக்ஷு—பௌத்த சந்நியாசி; பிச்சையெடுத்துப் புசிக்கும் துறவி.

36\. மகா பூதம்—நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் ஆகிய ஐந்தும் மகா பூதங்களென்று கூறப்படும். நீரைச் சேர்ந்ததாகையால் இங்கு, ‘கடல்’ ஒரு மகா பூதமென்று கூறப்பட்டுள்ளது.
சூனியம்—பாழ் வெளி.

பக்கம்

36. காசீ-தல-வாஹினி—காசியின் அடியில் பெருகி யோடுகின்றது.
கிருஷ்ண-சகி—கிருஷ்ணனின் தோழி.

37. நீச—தாழ்ந்த.

38. விரஸம்—சுவையில்லாமை; அருசி.
லுங்கி—வேஷ்டி இல்லாதபோது இடுப்பில் சுற்றிக் கொள்ளும் தளுவம் அல்லது 'லங்கோட்டா'.

39. அப்பாவி—பேதை.
கோபதாபம்—சினமும் கொதிப்பும்.
தார்மிகர்—தர்மநூல்களின்படி ஒழுகுபவர்கள்.

40. எறிகடல்வாய்—அலைவீசும் கடலினிடையே.
வங்கம்—கப்பல்.
கூம்பு—பாய்மரத்தின் நுனி.
மாப் பறவை—பெரியதொரு பறவை.
அனிச்சா பத ஸங்காரா உப்பாதவ்யயதம்மிணோ—ஒரு பொருளுடன் கூடவே பிறந்த பண்டைத்தொடர்கள் நிலையில்லாதவை; பிறப்பும் அழிவும்தான் அவைகளின் தன்மைகள்.

41. பூகண்டம்—உலகத்தின் ஒரு துண்டு அல்லது பகுதி.

7. தென்னாட்டின் கங்கை

43. சந்திரமௌளி—பிறைசூடி; சிவன்.
பிந்துமாதவன்—திருமாலின் பெயர்களில் ஒன்று; காசியில் கங்கைக் கரைமீது 'பஞ்சகங்கா காட்' என்னுமிடத்தில் பிந்துமாதவர் கோயில் இருக்கிறது.
கோதை—கோதாவரி.

44. சௌந்தர்யம்—அழகு.

48. அத்தியயனம்—பயிற்சி.

ஸியாராம்சரண குப்த எழுதிய

# பெண்

மொழிபெயர்ப்பாசிரியர் :

கா. ஸ்ரீ. ஸ்ரீநிவாஸாசாரியார்

ஸியாராம்சரணர் ஹிந்தியில் பிரசித்தமான கவி. பல் கவிதைகளும், இரண்டு நாவல்களும், ஒரு நாடகமும் எழுதியிருக்கிறார். இவருடைய தமையனார் மைதிலீசரண குப்தாவும் பெரிய கவி. தமையனாரிடமிருந்துதான் இவர் காவிய தீட்சை பெற்றவர்.

இவருடைய உள்ளம் பரிசுத்தமானது. ஏழைகளிடத்திலும், ஹரிஜனங்களிடத்திலும், பெண்களிடத்திலும் மிகவும் இரக்கமும் அன்பும் உள்ளவர். பெண் உரிமைகளை நிலைநாட்டுவதில் இவருக்கு சிரத்தை அதிகம். இவர் எழுதிய இந்த நாவல் ஹிந்தியிலேயே சிறந்த நாவல் என்று பாராட்டப்படுகிறது.

'இந்த நாவல் முழுதும் கலைப் பண்பு நிறைந்தது' என்று ஆசார்ய காகா காலேல்கர் மெச்சியிருக்கிறார்.

'பெண்' ஒவ்வொரு ஆணும் பெண்ணும் படித்துப் பயன் பெறவேண்டிய நாவல்.

விலை ரூ. 1-12-0 தபால் செலவு தனி

---

நவயுகப் பிரசுராலயம் லிமிடெட், ஜி. டி. சென்னை.